# வள்ளுவர் வழியில் காந்தியம்

சிவலிங்க நூற்பதிப்புக் கழக

# வள்ளுவர் வழியில் காந்தியம்






ஆக்கியோன் :
புலவர். மு. சண்முகசுந்தரம், M. A.,
தமிழாசிரியர்,
நகராட்சி உயர்நிலைப்பள்ளி, சேலம்.

சிவலிங்க நூற்பதிப்புக் கழகம்
ஈரோடு

# நூன்முகம்

புத்தரின் கொள்கைகள் 'பௌத்த'மாக உருப் பெற்றன. ஏசுவின் கொள்கைகள் 'கிருத்தவ'மாக மலர்ந்தன. காரல் மார்க்ஸின் பொருளியல் தத்துவம் 'மார்க்சியம்' என்ற பெயரால் போற்றப்படுகிறது. அதே போல் இந்நூற்றாண்டில் நம் கண்ணெதிரில் வாழ்ந்து, உலக அமைதிக்குப் பாடுபட்ட காந்தியடிகளின் கொள்கைகளைக் 'காந்தியம்' என்ற பெயரால் உலகினர் அழைக்கின்றனர். காந்தியத்தைப் பல கோணங்களில் ஆராய்ந்து மேலை நாட்டினரும், இந்திய அறிஞர்களும் பல அரிய நூல்கள் எழுதியுள்ளனர். அவை உலக மக்களுக்கு அரிய கருவூலமாகும். நான் இச்சிறு நூலில், காந்தியத்தின் அடிப்படைக் கொள்கைகளை வள்ளுவரின் தலையாய கொள்கைகளோடு ஒப்பிட்டு, அவ்விரண்டின்பாலும் பொருந்தியுள்ள ஒருமைப்பாட்டினை எடுத்து விளக்கியுள்ளேன். அடிகள் வாழ்வில் இடம்பெற்ற சுவையான நிகழ்ச்சிகளை ஆங்காங்கு எடுத்து மேற்கோள்களாகப் பயன்படுத்தி யிருக்கிறேன். மாணவர்களின் பிஞ்சுள்ளத்தை ஏற்ற முறையில் வளர்ப்பதற்கு, இந்நூல் சிறிதளவாவது பயன்படும் என்று ஆசிரியப் பெரு மக்கள் கருதினால், நான் உண்மையில் பெருமகிழ் வெய்துவேன். இந்நூலைச் சிறந்த முறையில் வெளியிட்டுள்ள சிவலிங்க நூற்பதிப்புக் கழகத்தார்க்கும், இந்நூல் செம்மையாக வெளிவருவதற்கு அரும்பணியாற்றிய புலவர் பு. செல்வராசனார் அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சேலம்,
20—8—'60

மு. ச.

# உள்ளுறை

---

# 1. தோற்றுவாய்

'கிரெம்லின் மாளிகை'யைப் பற்றி அறியாத அரசியல் வாதி, உலகில் யாரும் இருக்கமுடியாது. ஏன் தெரியுமா? இரும்பு மனிதன் ஸ்டாலின் அம் மாளிகையில் அமர்ந்திருந்து, அரிய பல ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றி உருசியப் பெரு நாட்டை உலக வல்லரசுகளில் ஒன்றாக உருவாக்கினான்; எச்சிற் புழுவாக வாழ்ந்த உருசிய இனத்தை இமயப் பெருமலையாக்கினான்; வறுமை குடிகொண்டிருந்த அம்மா நிலத்தைப் பெருமை குடிகொண்ட பேரரசாக்கினான். இவ்வரிய புகழ் பலவினுக்கும் உரிய நிலைக்களனாக விளங்கும் அப்பெருமாளிகையின் அடியில், உறுதி மிக்க டங்ஸ்டன் என்ற உலோகத்தால் ஒரு சிறிய நிலவறை கட்டப்பட்டுள்ளது. ஒன்று உலகத்தில் பொன்றுப் பெரும் புகழை நிலைநிறுத்திச் சென்ற பன்னாட்டுச் சொல்லேருழவரின் உயர்காவியங்களும், பேரறிஞர் பலரின் அறிவியல் நூல்களும், அவ்வறையில் சேர்த்து வைக்கப்பட்டுள்ளன. அணுகுண்டு, நீர்வளிக் குண்டுகளின் தாக்குதல்களுக்கும் அழியாத பெருஞ் சிறப்போடு அச் சிற்றறை அமைக்கப்பட்டுள்ளது. ஒருகால் மூன்றும் உலகப் போரால் மக்கள் இனம்

அழிய நேரின், எஞ்சியுள்ள ஒரு சிலராவது அக் கலைக் கருவூலத்தைப் பெற்றுப் பயன் துய்க்கலா மன்றோ? மக்களினம் அழிவுற நேரினும், பல்லா யிரம் ஆண்டுப் பெருமுயற்சியால், பல பேரறிஞர் களால் யாக்கப்பட்ட அப்பெரு நூல்கள் அழியாம லிருக்கவேண்டும் என்ற உயர்ந்த எண்ணம் உருசிய மக்களின் குறிக்கோளாக இருக்கலாம். அவ்வறிவுச் சரக்கறையில் குறளும் இடம் பெற் றிருக்கிறது. குறளுக்கு வாய்த்த இச்சிறப்பு வியத் தற்குரியதன்று எனினும், இச் செய்தியைக் கேட் குந்தோறும், தேனருவித் திரை எழும்பி நம் காதின் வழி ஒழுகும்.

இப் பெற்றித்தாய பேரின்பத்தை ஹோமர் என்ற மாகவியைப் பெற்றெடுத்த கிரேக்கரும், வர்ஜிலைப் பெற்றெடுத்த உரோமானியரும், சேக்ஸ் பியரைப் பெற்றெடுத்த ஆங்கிலேயரும், விக்தர் ஹியூகோவைப் பெற்றெடுத்த பிரெஞ்சியரும், கெதேயைப் பெற்றெடுத்த ஜெர்மானியரும் தால்ஸ் தாயைப் பெற்றெடுத்த உருசியரும், காளிதாசனைப் பெற்றெடுத்த இந்தியப் பெருமக்களும் ஒருங்கே நுகரப்பெறுவர்.

ஆங்கிலப் பேரரசு இந் நூற்றாண்டின் தொடக் கத்தில் உலகின் பெரும்பகுதியைத் தன்னகத்தில் அடக்கிக்கொண்டு வீறுபெற விளங்கியது. உல கின் மூலை முடுக்கெல்லாம் ஆங்கிலேயரின் கொடி பட்டொளி வீசிப் பறந்துகொண்டிருந்தது. ஆங்கில நாட்டின் மூளை என்று அறிஞர்களால் பாராட்டப் படுபவனும், அரசியல் வல்லுநனும், கேட்டார்ப்

பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழி யும் நாவன்மை படைத்த வல்லாளனுமான வின்ஸ்டன் சர்ச்சில், 'ஆங்கிலப் பேரரசில் கதிர வன் மறைவதில்லை' என்று பெருமை பேசினன். ஆனால் அந்நாட்டில் வாழ்ந்த ஒரு பேரறிஞன் யாது நவின்றன் தெரியுமா? 'பெருமை மிக்க ஆங்கிலப் பேரரசையும் நான் இழக்க ஒருப்படு வேன். ஆனால் சேக்ஸ்பியர் எழுதியுள்ள நாடகக் காவியத்தில் ஓரசையைக்கூட நான் இழக்க மாட் டேன்' என்று கூறினன். அவன் கூற்று உண்மை யாகிவிட்டது. ஆங்கிலப் பேரரசு சீர்குலைந்தது. ஆனால் சேக்ஸ்பியரின் அமர காவியங்கள் இன்றும் நிலவுகின்றன ; என்றும் நிலவும்.

நாட்டையும் விட, நல்லறிஞரின் நூல்கள் உயர்வாக ஒவ்வொரு மொழியினராலும் மதிக்கப் பெறுகின்றன. ஒவ்வொரு மொழியினரும், தம் மொழியில் தோன்றியுள்ள உயர்பனுவல் கட் டுரைத்த உறுதியின் வழியே, உலகப்பெரியார்கள் நின்றொழுகினர் என்று கூறிக்கொள்வதில் பெருமை கொள்கின்றனர். 'பொய்யாமொழி' பற்றிக் காந்தி யடிகளும் ஒழுகினர் என்று 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட' தமிழ்ப் பெருமக்களும் எண்ணல் இயல்பே. ஆனால் திருக் குறள் ஒன்றே காந்தியடிகளின் கொள்கைகளை வரையறுத்துச் செப்பம் செய்தது என்று கூறல் தற்பெருமை. கீதை, விவிலியம், குர்ஆன் ஆகிய பல சமய நூல்களினின்றும், தாம் பல உண்மைகளை உணர்ந்து, அவற்றைத் தம் வாழ்வில் கடைப்

பிடித்ததாக அடிகளே குறிப்பிடுகிருர். 'திருக் குறளைப்பற்றிக் காந்தியண்ணல் அறிவாரோ? குற ளில் அவர் படிந்ததுண்டோ? தமிழ் கற்றபின் அல்லவோ குறள் பயில முடியும்?' என்றெல்லாம் ஐயம் கிளப்புவோர், அடிகளின் வாழ்க்கை வர லாற்று நூலான 'உண்மையின் ஆய்வை'ப் (My Experiments with Truth) படித்து உணர்ந்து கொள்ளட்டும்.

காந்தியண்ணல் தென்னுப்பிரிக்காவில் வாழ்ந்த போது, அவருடன் நெருங்கிய உறவுகொண்டவர் கள் தமிழரே. ஏனெனில் தென்னுப்பிரிக்காவில் தோட்டக் கூலிகளாகவும், சுரங்கக் கூலிகளாகவும் பணி புரிந்தோரில் பெரும்பான்மையினர் தமிழரே. அடிகள் தம் நூலில் பல இடங்களில் பாராட்டிக் குறிப்பிடும் தம்பி நாயுடு, ஜேக் முதலியார், பாலசுந் தரம் ஆகியோர் தமிழரே. தென்னுப்பிரிக்க உரி மைப் போரில் இன்னுயிர் நல்கி, அண்ணலின் அருளுள்ளத்தில் நீங்காத இடம் பெற்ற வள்ளி யம்மை தமிழ்ப் பெண்ணே. அடிகள் இந்திய நாடு திரும்பிச் சபர்மதி ஆற்றங்கரையில் ஆசிரமம் அமைத்தபோது, அதில் இடம் பெற்ருேர் தமிழரே. தமிழர், அடிகள் வாழ்வில் உயிராய் உணர்வாய் ஒன்றி விட்டனர். அண்ணலே இக் கருத்தைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

'தென்னுப்பிரிக்க உரிமைப் போரில் தமிழ் மக்கள் புரிந்த துணையைப் போலவேறெவ் விந்தி யரும் புரியவில்லை. அவர்கட்கு நன்றி செலுத்த

அவர்கள் நூல்களைப் பயிலவேண்டுமென்று எண்ணினேன். அப்படியே, அவர்கள் மொழி பயில்வதில் மிக ஊக்கமாக ஒரு திங்கள் கழித்தேன். அம்மொழியைப் பயிலப் பயில அதன் அழகை உணரலானேன். அது உள்ளத்தைக் கவரும் ஓரினிய மொழி. தமிழ் மக்களுள் பண்டை நாளிலும் இந்நாளிலும் கூடப் பல அறிஞர் இருந்தனர்—இருக்கின்றனர் என்பது அம் மொழியின் அமைப்பாலும், பயிற்சியாலும் அறியக் கிடக்கிறது. இந்திய மக்கள் இமய முதல் குமரி வரை ஓரினமாக வாழ வேண்டுமானால், தமிழரல்லாத மற்ற மொழியினரும் தமிழுணரல் வேண்டும்.'

∴ ∴ ∴

'ஆங்கிலம் பயில்வதற்கு முன்னர்த் தமிழ் மொழி பயிலல் வேண்டுமென்று யான் பன்முறை பகர்ந்திருக்கிறேன். 1915 ஆம் ஆண்டிலேயே ஆங்கிலத்தினும் தமிழ் மொழியைச் சிறப்பாகக் கொள்ளுமாறு தமிழ் மக்களை வேண்டிக் கொண்டேன் ; தாய் மொழியில் பேசுமாறும், தாய் மொழி நூல்களைப் பயிலுமாறும் மக்களை வேண்டிக்கொண்டேன். திருக்குறளைப் பற்றிச் சில செம்மொழிகள் உங்கள் வரவேற்பில் மிளிர்கின்றன. இருபது ஆண்டுகட்கு முன்னரே யான் தமிழ் பயிலத் தொடங்கியதற்குக் காரணம், திருக்குறள் மூலத்தையே நேராகப் படித்தல் வேண்டுமென்று என்னுள்ளத்தெழுந்த அவாவேயாகும். தமிழ்மொழியில் புலமை பெறுதற்குரிய ஓய்வு எனக்கு ஆண்டவன்

அருளினுனில்லை. அது குறித்து யான் உறும் வருத் தத்துக்கோர் அளவில்லை. அவரவர், அவரவர்க் குரிய தாய்மொழி வாயிலாகவே கல்வி பெறவேண் டும். தமிழ் மக்கள், தம் மொழியை ஆங்கிலம் முதலிய மொழிகளைவிட முதன்மையாகக் கருதல் வேண்டும். தமிழ் நாட்டில் ஓரிடத்தில் எனக்கு ஆங்கிலத்தில் வரவேற்பறிக்கை வழங்கப்பட்டது. உடனே யான் அதை மறுத்துரைத்ததை நீங்கள் அறிந்திருக்கலாம். அவ்வறிக்கை தமிழில் எனக்கு அளிக்கப்பட்டிருந்திருப்பின் நான் பெரிதும் மகிழ்ந் திருப்பேன்.'

ஃ ஃ ஃ

'தமிழ்மக்கள் எனது குருதிக் கலப்புற்ற உடன் பிறந்தவர் போலத் தோன்றுகிருர்கள்.'

ஃ ஃ ஃ

அடிகளின் மேற்கூறிய உரைகள் நமக்கு எதைக் காட்டுகின்றன? தமிழின்பாலும், தமிழ் மக்கள்பாலும் அடிகள் கொண்டிருந்த பெரு விருப் பையும், பேரன்பையும் காட்டுகின்றன. குறிப்பாகத் திருக்குறள்பால் அவர் உள்ளம் ஈர்க்கப்பட்டதை நாம் உணர்கிறேம். மேலும் அடிகள் தென்னுப்பிரிக் காவில் வாழ்ந்தபோது, திருக்குறளின் ஆங்கில மொழிபெயர்ப்பை அடிக்கடி எடுத்துப் படிப்ப துண்டு என்ற செய்தியை, அவர் வாழ்க்கை வர லாற்றில் காணலாம். வள்ளுவர் வற்புறுத்தும் சிறந்த அறங்களான அருளுடைமை, அழுக்காருமை,

அன்புடைமை, இனியவை கூறல், இன்னா செய்யாமை, ஈகை, ஒழுக்க முடைமை, கள்ளாமை, கொல்லாமை, புலான் மறுத்தல், பொறையுடைமை, மடியின்மை, வாய்மை, வினைத்தூய்மை, வெகுளாமை, வெஃகாமை முதலியன அடிகளின் வாழ்க்கையிலும் படிந்திருக்கக் காணலாம். குறிப்பாகச் சொன்னால் மோகனதாஸ் கரம்சந்திர காந்தி, பிற்காலத்தில் 'மகாத்மா'வாக மாறியதற்குத் திருக்குறளும் துணை புரிந்தது என்பது மறுக்கமுடியாத உண்மை. எனவே வள்ளுவர் வழியில் காந்தியம் மலர்ந்தது என்பது பொருந்தும்.

°°°

# 2. வாய்மை

காந்தியடிகள் கடைப்பிடித் தொழுகிய அறங்களில் தலையாயது வாய்மை என்பது சொல்லாமல் விளங்கும். தம்முடைய வாழ்க்கையை வாய்மையின் ஆய்வுக் கூடமாகவே அவர் கருதினார். அதனால்தான், தாம் எழுதியுள்ள சுய சரிதைக்கு, 'உண்மையின் ஆய்வு' எனப்பெயரிட்டார். 'சத்திய சோதனை' என்று கூறினும் பொருந்தும். தம் வாழ்வில் தமக்கு நேர்ந்த ஒவ்வொரு நெருக்கடியையும், துன்பத்தையும், வாய்மைக்கு நேர்ந்த சோதனையாகவே அவர் கருதினார்; அத் துன்பங்களில் தாம் பெற்ற வெற்றியை, வாய்மையின் வெற்றியாகவே கருதினார். வாய்மை அடிகளின் வாழ்வில் நீக்கமறக் கலந்து விட்டது. அடிகளையும் வாய்மையையும் தனித்தனியே பிரித்தறிதல் முடியாது. அடிகளின் உள்ளத்தில் அரும்பிய ஒவ்வோர் எண்ணமும், அவர் வாயினின்றும் வெளிக் கிளம்பிய ஒவ்வொரு சொல்லும், அவர் மெய்வழி இயங்கிய ஒவ்வொரு சிறு செயலும் வாய்மையின் முத்திரை பெற்று விளங்கின. ஏன்? அவர் உயிர்ப்பும் வாய்மை மணம் கமழ்ந்தது.

மெய்மை என்றும், உண்மை என்றும், சத்தியம் என்றும் போற்றப்படும் இவ்வாய்மை அறத்தை இனிக் குறள் என்னும் துலாவில் ஏற்றி, அதன் பொருண்மை காண்போம். எப்பொருளை எடுத்துக் கொண்டாலும், அதிகாரத்தின் முன்னமைந்த குறட்பாக்களில் அப்பொருளின் தன்மையை விளக்கிக்கூறுவது வள்ளுவர் கொள்கை; இடையில் அமைந்துள்ள பாக்களில் அப்பொருளின் ஏதுக்களைக் கூறுவர்; இறுதியில் அமைந்துள்ள பாக்களில், அப்பொருளை மேற்கொள்வதால் ஏற்படும் நன்மை தீமைகளை ஆராய்வர். இம்மரபின்படி வாய்மை அதிகாரத்தின் முதற்குறள், அவ்வறத்தின் தன்மையை விளக்கிச் சொல்லுகிறது.

> "வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
> தீமை யிலாத சொலல்"

—என்பதே குறள். 'மெய்மை என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது யாதென்று வினவின், அது பிறிதோருயிர்க்குத் தீங்கு சிறிதும் பயவாத சொற்களைச் சொல்லுதல்' என்று அப்பாவிற்குப் பொருள் விரிக்கிறார் பரிமேலழகர். 'தீமை யிலாத சொலல்' என்ற தொடரில் 'சொலல்' என்ற சொல் ஆராய்ச்சிக்குரியது. 'தீமை யிலாத சொலல்' மட்டும்தான் வாய்மையா? அப்படியெனில் தீமையை உள்ளத்தால் எண்ணலாமா? தீமையை உடலால் செய்யலாமா? என்பன போன்ற ஐயப்பாடுகள் எழும். ஆனால் அவ்வையப்பாடுகள் நுனித்துணர்வாருக்குச் சூறைக்காற்றில் பட்ட சருகுபோல் பறந்தொழி

யும். விதையொன்று போடச் சுரையொன்று முளைக்குமா? வற்றிய பாலையில், கதிர் முற்றிய செந்நெல் குலுங்குமா? சாக்கடைச் சேற்றில் சந்தனம் வளருமா? தீமையும் பொய்மையும் படிந்த உள்ளத்தில் தீமையில்லாத சொல் எவ்வாறு கருக்கொள்ளும்? எண்ணத்தின் ஒலி வடிவமன்றோ சொல்! எண்ணத்தில் களங்கம் காணின், சொல்லிலும் களங்கம் படிந்திருத்தல் உறுதி. எனவே, உள்ளம் தீமையற்றிருந்தால் தான், சொல்லும் தீமையிலாது வரும். பின் உடலின் நிலை யாதென்று காண்போம். முதற்கண் உடலுக்கும், உள்ளத்திற்கும், வாய்ச் சொற்கும் உள்ள தொடர்பை அறிவோம். உடல் பருப்பொருள். உள்ளம் உடலின் கண் அமைந்த நுண்பொருள். வாய்ச் சொல்லும் உடலின் துணை கொண்டு உருப்பெறும் நுண்பொருளே. உள்ளத்தின் துணையின்றி உடலும், உடலின் துணையின்றி உள்ளமும் இயங்குதல் முடியாது. அவ்வாறு இயங்கும் வாழ்க்கை பேய் வாழ்க்கை; பித்து வாழ்க்கை; நோய் வாழ்க்கை. உள்ளத்தின் வழியே மெய்யும் வாயும் நின்றொழுகும் வாழ்க்கை தான் உண்மை வாழ்க்கை. உள்ளத்தாலும் உடலாலும் தீமை பாராட்டுவான், யாதொன்றும் தீமையிலாத சொலல் எங்ஙனம்? அவ்வாறு 'தீமையிலாத சொலல்' கைவரப் பெற்றவன் 'மனோ வாக்குக் காயம்' என்னும் முக்கரணத் தூய்மையும் கைவரப் பெற்றவன்.

நிற்க, அகம் தூய்மையுறுவதே வாய்மையினுற்றான் என்பது வள்ளுவர் கொள்கை. உடல்

எவ்வாறு நீரினுல் அழுக்கு நீங்கித் தூய்மை பெறு கிறதோ, அதுபோல் உள்ளமும் வாய்மையினுல் மாசு நீங்கித் தூய்மை பெறுவதாகக் கூறுகிருர்.

"புறந்தூய்மை நீரா னமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும்"—என்பதே அக்குறள்.

ஞாயிறு, திங்கள், தீ ஆகிய பலவும் உலகின் புறத்திருளைக் கடியும் ஆற்றல் பெற்றவை. ஆனுல் இவற்ருனும் நீங்காத பேரிருள் ஒன்று உண்டு. அதுவே அறியாமை என்னும் இருள். இவ்விருளைப் போக்கச் சான்ருேர் ஒரு கைவிளக்கு வைத்திருக் கின்றனராம். அதை வள்ளுவர் பெருமான்,

"எல்லா விளக்கும் விளக்கல்ல சான்ருேர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு"

—என்று விளக்கிப் போந்தார். மேலும், 'மானத் தோடு பொருந்த வாய்மையைச் சொல்பவன், தவத்தோடு தானஞ் செய்வாரினும் சிறந்தவன்' என்றும், 'பொய்யாமை யன்ன புகழில்லை' என்றும், 'அப்பொய்யாமையே மறுமைக்குரிய எல்லா அற மும் தரும்' என்றும் பொய்யில் புலவர் பொருளுரை புகர்கிருர்.

இவற்ருேடு அமையாமல், 'மெய்ந்நூல்கள் பலவற்றுள்ளும், வாய்மையின் மிக்கனவாக யாதொரு தன்மையானும் சொல்லப்பட்ட பிற அறங்கள் இல்லை' என்றும், 'அறங்களில் மிக்க

அப்பொய்யாமையைப் பொய்யாது ஆற்றின், அறம் பிற செய்யாமை செய்யாமை நன்று' என்றும் முப்பால் முழங்கும். எனவே அறங்களிலெல்லாம் தலைமணி போன்றது வாய்மை. அவ்வாய்மையே காந்தியடிகட்குப் பொய்யா விளக்கு. அடிகள் அவ்விளக்கின் துணைகொண்டு அறியாமை இருளை ஓட்டி, இப்பாரினை நேரிய வழியில் செலுத்தினர்.

இவ்வுலகமென்னும் பூக்காட்டில் இதுகாறும் எத்தனையோ மணமலர்கள் அலர்ந்தன. சாக்கிய நாட்டில் சித்தார்த்தன் என்னும் செந்தாமரை கட்டவிழ்ந்து கடிமணம் வீசியது. யூதேயா நாட்டில் ஏசு என்னும் எழில் முல்லை இன்னகை காட்டிற்று. வங்கப் பெருநாட்டில் விவேகானந்தன் என்னும் செங்கழுநீர் பூத்தது. இப்பேரறிவாளரெல்லாம் கருவிலே திருவுடையார். எதிர்கால வாழ்வில் அவர்கள் நாட்ட விருந்த புகழ் நலம், அன்னர் இளமை வாழ்விலேயே மின்னிட்டு ஒளிர்ந்தது. ஆனல் காந்தியண்ணலின் வாழ்க்கை, அவர்கள் வாழ்க்கையினின்றும் முற்றும் மாறுபட்டது. எதிர்கால வாழ்வில் 'மகாத்மா'வாக மாறும் அறிகுறி எதுவும் அவர் இளம்பருவ வாழ்வில் தென்படவில்லை; நம்மைப்போல் அவரும் பொய் புகன்றர்; திருடினர்; குலவொழுக்கத்தைக் குப்பையில் தள்ளினர்.

காந்தியடிகள் 'மோட்பனியா' என்ற வணிகர் குலத்தைச் சேர்ந்தவர். அக்குலத்தார் புலால் உண்ணும் வழக்கமில்லாதவர்கள். ஆனல் காந்தி

யடிகளோ ஒரு தீய நண்பனின் கூட்டுறவால் புலால் உண்ணவும் வேறு சில தீய வழக்கங்களை மேற்கொள்ளவும் தொடங்கினார்; பிறகு தாம் செய்த இக்குற்றங்களைப் பற்றிச் சிந்தித்தார்; அவர் உள்ளம் அவரை நாள்தோறும் உறுத்தத் தொடங்கியது; தாம் செய்த தவறுகளுக்காகக் கண்ணீர் வடித்தார்; தம் தவறுகளை எல்லாம் ஒரு தாளில் எழுதி, நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் கிடந்த தந்தையிடம் கொடுத்தார்; அவர் படுத்திருந்த படுக்கைக்கு எதிரே உட்கார்ந்து கொண்டார். பிறகு என்ன நடந்தது என்பதைக் காந்தியடிகளே சொல்கிறார்:

'என் தந்தை கடிதத்தை முற்றும் படித்தார். படிக்குங்கால் அவர் கண்களிலிருந்து கண்ணீர் முத்து முத்தாக வழிந்தது. கடிதமும் நனைந்து போயிற்று. ஒரு கணம் அவர் கண்ணை மூடிச் சிந்தனையில் ஆழ்ந்தார்; பின்னர்க் கடிதத்தைக் கிழித்துப் போட்டார்; கடிதத்தைப் படிப்பதற்காக எழுந்து உட்கார்ந்தவர் மீண்டும் படுத்துக் கொண்டார். நானும் அழத் தொடங்கினேன்; அவரது அளவில்லாத மனவேதனையை உணர்ந்தேன். நான் ஓர் ஓவியக் கலைஞனாக இருந்தால் அந்தக் காட்சியை இன்று படமாக எழுதிவிடுவேன். இன்னும் என் உளக் கண்ணில் அக்காட்சி அவ்வளவு தெளிவாகத் தென்படுகிறது.

'அந்த அன்புக் கண்ணீரால் என் இதயம் தூய்மை பெற்றது; பாவம் நீங்கிற்று. அத்தகைய அன்பை நுகர்ந்தோர் மட்டுமே அதன் இயல்பை

உணர்தல் கூடும். மன்னிக்கும் மாண்பு என் தந்தைக்கு இயல்பாக ஏற்பட்டதன்று. அவர் சினங் கொண்டு கடுஞ்சொல் மொழிவாரென்றும், நெற்றி யில் புடைத்துக் கொள்வார் என்றும் எண்ணியிருந் தேன். ஆனால் அவருடைய அமைதி எனக்கு வியப்பை அளித்தது. நான் ஒளியாது என் குற்றத்தை ஒப்புக்கொண்டதே இதற்குக் காரணம் என்று நம்புகிறேன். மன்னிப்பதற்கு உரிய பெரி யோரிடம் குற்றத்தை ஒளியாது ஒப்புக் கொள்வ தும், இனிமேல் குற்றம் செய்வதில்லை என்று உறுதி மொழி கூறுவதுமே குற்றத்தைப் போக்கிக் கொள்வதற்குச் சிறந்த கழுவாய் ஆகும். நான் எனது குற்றத்தை ஒப்புக் கொண்டதன் பயனாக என்னைப்பற்றி என் தந்தைக்குக் கவலையே இல்லா மல் போயிற்று. என்னிடம் அவர் கொண்டிருந்த அன்பும் அளவு கடந்து பெருகிற்று.'

மேற் கூறிய அண்ணலின் குற்றங்கள், அது போழ்து அவருக்கு ஒரு பொருட்டாகத் தோன்ற வில்லை. ஆனால் அக்குற்றங்களை மறைக்கப் பெற் றோரிடம் பலமுறை பொய் புகல நேர்ந்தது. புலால் உண்டு வீடு திரும்பும் நாட்களில் அன்னை இரா உணவு உண்ண அழைத்தால், 'பசியில்லை', 'வயிறு என்னவோ போல் இருக்கிறது', 'நண்பர் வீட்டில் உண்டேன்' என்றெல்லாம் பொய் கூறுவார். அப் பொய்மையே அவரைப் பெரிதும் வாட்டியது. அப் பொய்மையிலிருந்து நீங்கவே, அடிகள் தீச்செயல் களை விட்டொழித்ததாகக் கூறுகிறார். எனவே, அடிகளை இளமைக் காலத்தில் தீயொழுக்கத்தி னின்றும் தடுத்துக் காத்தது வாய்மையே அன்றோ?

காந்தியடிகள் இளமையில் செய்த தவறுகளை ஒளிவு மறைவின்றி, ஒன்று விடாமல் தம் வாழ்க்கை வரலாற்றில் எழுதியிருக்கிறார். இப்பண்பு எதைக் காட்டுகிறது? வாய்மையில் அவர் கொண்ட பற்றையே காட்டுகிறது. வாய்மையில் பற்றற்றோர் தம் தவறுகளை மூடி மறைப்பர். பசுத்தோல் போர்த்த புலியாக மக்களிடையே உலவுவர். ஆனால் காந்தியடிகளோ, தவறு செய்த இளமைக் காலத்தில் கூட, வாய்மையின் பால் ஒரு பிடிப்புடன் வாழ்ந்தார்.

காந்தியடிகள் இராசகோட்டை உயர் நிலைப் பள்ளியில் சேர்ந்த ஆண்டு குறிப்பிடத்தக்க ஒரு நிகழ்ச்சி நடந்தது. அவ்வாண்டு திருவாளர் கைல்சு என்ற பள்ளித் தணிக்கையாளர் (Deputy Inspecter of Schools) வந்தார். அவர் ஒவ்வொரு வகுப்பையும் சோதனை செய்தார். காந்தியடிகளின் வகுப்புக்கும் வந்தார். ஐந்து ஆங்கிலச் சொற்களைச் சொல்லி எல்லா மாணவரையும் எழுதுமாறு பணித்தார். அவற்றில் 'கெட்டில்' (Kettle) என்ற சொல்லும் ஒன்று. அச்சொல்லை அடிகள் பிழைபட எழுதினார். அருகில் நின்று கொண்டிருந்த ஆசிரியர் இத்தவற்றை உணர்ந்தார். தம் செருப்புக் காலால் அடிகளின் பாதத்தை மிதித்து, அருகிலுள்ள மாணவனைப்பார்த்து எழுதுமாறு சைகை காட்டினார். ஆனால் காந்தியடிகள் அவ்வாறு செய்யவில்லை. மறுநாள் ஆசிரியர் வகுப்பிற்கு வந்ததும் காந்தியடிகளை நோக்கி, 'நீ பெரிய முட்டாளடா. பக்கத்து மாணவனைப் பார்த்து எழுதுமாறு நான் பலமுறை உனக்குச் சாடை

காட்டியும், உன்னால் புரிந்து கொள்ள முடிய வில்லை' என்று கூறி நகையாடினர். ஆனால் அண்ணல் காந்தியடிகள் அப்போது என்ன எண்ணினர் தெரியுமா? ஆசிரியரின் அறிவுரை தவருன தென்றும், பக்கத்து மாணவனைப் பார்த்து எழுதுவது குற்றம் என்றும் எண்ணினர். என்னே அடிகள் வாய்மையின்பால் கொண்ட உறுதி!

காந்தியடிகள் சட்டக் கல்வி பயில்வதற்காக இங்கிலாந்து புறப்பட்டபோது, அவருடைய அன்னை புத்லிபாய் பெரிதும் உளங்கவன்றர். மேலை நாடு சென்றல் புலால் உண்ண வேண்டி நேருமென்றும், மதுவருந்த நேருமென்றும் எண்ணினர். அச் செயல்கள் குலவொழுக்கத்திற்குப் புறம்பானவை. தம் மகனும் அத்தீய செயல்களில் ஈடுபட நேருமே என்பதுதான் அன்னையாரின் கவலை. அப்போது அடிகள், தாம் மதுவையும் புலாலையும் கண்ணெடுத்துப் பார்ப்பதில்லை என் றும், பிற மகளிரை அன்னையாகக் கருதுவதாகவும் ஆணையிட்டுக் கூறினர். இங்கிலாந்தில் வாழ்ந்த அம்மூன்றண்டுக் காலமும், அன்னைக்கு அளித்த வாக்குறுதிகளினின்றும் அவர் சிறிதும் தவறவில்லை. எவ்வளவோ இன்னல்களும், சோதனைகளும் அங்கு நேர்ந்தன. மரக்கறி உணவைத் தேடி அவர் பல கல் தொலை நடந்தார்; பல நாள் பட்டினி கிடந்தார்; பல நண்பர் குழாத்திடை அவமானப் பட்டார்.

முட்டை புலால் உணவன்று என்று மேலை நாட்டு அறிஞர் பலர் வாதிட்டனர். இங்கிலாந்தில்

மரக்கறி உணவின்பால் பற்றும் உறுதியும்கொண்ட நண்பர் பலர் முட்டை சாப்பிட்டனர். முட்டை சாப்பிடுவதில் தவறு ஒன்றும் இல்லை என்று காந்தி யடிகளும் எண்ணினர். ஆனால் அன்னைக்குத் தாம் அளித்த வாக்குறுதி அவர் உள்ளத்தில் நிழலாடி யது. முட்டை அறிஞர்களின் கூற்றுப்படி புலால் உணவில்லாமல் இருக்கலாம். ஆனால் அவருடைய அன்னையின் கூற்றுப்படி அது புலால் உணவே. அறிஞரின் கூற்றை மேற்கொண்டு முட்டை உண்டால், அச்செயல் அன்னையிடம் தாம் அளித்த வாக்குறுதியை மீறுவதாகும். அவ்வாக் குறுதியை மீறுவதானது, வாய்மையிலிருந்து தவறு வதாகும். எனவே முட்டை உண்ணும் எண் ணத்தை அவர் தம் உள்ளத்தினின்றும் நீக்கினர். இங்கும் வாய்மையே முன்னின்று காத்தது.

பள்ளியிலோ அல்லது கல்லூரியிலோ பயிலும் ஆங்கில மாணவர்கள் எல்லாரும் திருமணமாகா தவர்கள். திருமணம் செய்துகொண்டு கல்வி பயிலுவது அந் நாட்டில் காணமுடியாத ஒன்று. மண வாழ்க்கைக்கும் படிப்புக்கும் ஒத்து வராது என்று அங்கே கருதப்படுகிறது. இந்திய நாட்டிலும் பண்டைக் காலத்தில் அவ்வாறே கருதப்பட்டது. மாணுக்கன் 'பிரம்மசாரி' என்றே அழைக்கப் பட்டான். பிற்காலத்தில் குழந்தை மணம் தலை யெடுக்கத் தொடங்கிய காரணத்தால், மணமான வர்களும் பள்ளியில் சேர்ந்து பயிலவேண்டிய நிலை ஏற்பட்டது. இங்கிலாந்து நாட்டுக்குக் கல்வி பயிலச் சென்ற மாணவர்கள் திருமணமானவர்க ளாக இருந்தாலும், பொதுவாகத் திருமணமாக

வில்லை என்று சொல்லுவதே வழக்கம். திருமண மானவர்கள் என்று தங்களைச் சொல்லிக்கொள்ள அவர்கள் வெட்கப்பட்டார்கள். மேலும் இங்கிலாந்து சென்ற மாணவர்களெல்லாம் அந்நாட்களில் ஏதேனும் ஓர் ஆங்கிலக் குடும்பத்தில் தங்கியிருந்து கல்வி கற்பதே பொதுவான வழக்கமாக இருந்தது. அக் குடும்பங்களிலிருந்த திருமணமாகா இளம் பெண்கள், எல்லோருடனும் வேறுபாடின்றி மகிழ்ச்சியாகப் பழகுவார்கள் ; உலாவவும் உடன் செல்வார்கள். திருமணமானவன் என்று தெரிந்தால் அப்பெண்களுடன் நெருங்கிப் பழக முடியாதல்லவா ? அந் நாட்டில் பெண்களே கணவன்மாரைத் தேர்ந்தெடுக்கும் பழக்கமிருப்பதால் ஆடவரோடு நெருங்கிப் பழகுவதை அவர்களுடைய பெற்றோரும் தடுப்பதில்லை.

காந்தியடிகளையும் இத் தொற்று நோய் பற்றிக் கொண்டது. காந்தியடிகள் அப்போது திருமண மானவர். ஓராண் மகவும் பிறந்திருந்தது. காந்தியடிகள் இயற்கையாகவே நாணம் மிக்கவர். அந் நாண உணர்வு பெண்களிடம் நெருங்கிப் பழக முடியாமல் அவரைத் தடுத்து வந்தது. இருப்பினும் அடிக்கடி பெண்களுடன்சேர்ந்து அவர் உலாவச் செல்லுவார். ஆனால், அவர்களுடன் மிகுதியாகப் பேசமாட்டார். இலண்டனில் ஓர் ஆங்கில மூதாட்டியாருக்கும் அவருக்கும் நட்பு ஏற்பட்டது. அவ்வம்மையார் காந்தியடிகள்பால் பேரன்பு காட்டினார். அடிகளும் அவ்வம்மையாரின் இல்லத்துக்கு அடிக்கடி செல்லுவார். விருந்துகளின் போது காந்தியடிகளை அவர் தவறாது

அழைப்பார். திருமணமாகாத பெண்கள் பலரும் அவ்விருந்தில் கலந்து கொள்வதுண்டு. அப் பெண்களைக் காந்தியடிகளுக்கு அவ்வம்மையார் அறிமுகம் செய்து வைப்பார்; குறிப்பாகத் தம் வீட்டில் தங்கியிருந்த ஒரு பெண்ணை அடிகளோடு நெருங்கிப் பழக விட்டார். சிறிது நாட்களில் அவ் வம்மையாரின் எண்ணம் காந்தியடிகட்குப் புலப் படத் தொடங்கியது. அப்பெண்ணைத் தமக்குத் திருமணம் செய்துவைக்க அவர் முயல்கிருர் என் பதை அடிகள் புரிந்து கொண்டார். இவ்வளவு நாட்களாகத் தாம் மேற்கொண்டிருந்த பொய் வாழ்க்கை அவர் உள்ளத்தை உறுத்தியது. அம் மூதாட்டியாருக்குப் பின்வருமாறு ஒரு நீண்ட முடங்கல் விடுத்தார்:

'பிரைட்டனில் நாம் முதன் முதலில் சந்தித்த நாளிலிருந்து தாங்கள் என்னிடம் அளவு கடந்த அன்பு காட்டி வந்திருக்கிறீர்கள். என்னைத் தங்கள் மகனைகவே எண்ணி என்பொருட்டுக் கவலை எடுத்து வந்திருக்கிறீர்கள். எனக்கு மணம் செய்து வைக்க வேண்டுமென்று விரும்பி, அதற்காக இளம் பெண்களை எனக்கு அறிமுகம் செய்துவைத்து வரு கிறீர்கள். ஆனல் செயல் மிஞ்சிப் போவதற்கு முன் னல், தங்களுடைய அன்புக்கு நான் அருகனல்லன் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். தங்கள் வீட்டுக்கு வரத் தொடங்கியபோதே நான் இல்லறத்தான் என்பதைத் தெரிவித்திருக்கவேண் டும். இங்கிலாந்தில் இந்திய மாணவர்கள் திருமண மாகாதவர்போல் நடிப்பதை அறிந்து நானும் அவ் வாறு செய்து வந்தேன். என் தவற்றினை இப்போது

உணர்கிறேன். சிறுவனாக இருந்தபோதே எனக்கு மணம் ஆகிவிட்டது. எனக்கு ஒரு மகனும் இருக்கிறான். இத்தனை காலம் இவ் விவரங்களைத் தங்களுக்கு அறிவியா திருந்ததன் பொருட்டு என் உளம் வருந்துகிறது. இப்பொழுதேனும் உண்மை சொல்வதற்கு இறைவன் எனக்கு மன உறுதி அளித்ததுபற்றி மகிழ்ச்சியடைகிறேன். என்னைத் தாங்கள் மன்னிப்பீர்களா? எனக்குத் தாங்கள் அறிமுகம் செய்துவைத்த பெண்ணிடம், தகுதியற்ற உரிமை எதையும் நான் எடுத்துக் கொண்டதில்லை யென்று உறுதி கூறுகிறேன். இக்கடிதத்தைப் படித்ததும், தங்கள் அன்புக்கு மாறாக நான் நடந்து கொண்டதாய்த் தாங்கள் கருதினால், அதற்காகத் தங்கள்மீது வருத்தப்படமாட்டேன். தாங்கள் இதுகாறும் என்னிடம் காட்டிவந்த பேரன்புக்கும், செய்த பேருதவிக்கும் என்றென்றும் நன்றி செலுத்த நான் கடமைப்பட்டவனாவேன். இதற்குப் பிறகும் தாங்கள் என்னைப் புறக்கணியாமல், தங்கள் வீட்டுக்கு வரத் தகுதியுள்ளவனாகக் கருதினால் நான் மகிழ்ச்சியடைவேனென்று சொல்ல வேண்டியதில்லை. தங்கள் அன்புக்கு இதை மற்றோர் அறிகுறியாகக் கருதுவதுடன், அவ்வன்புக்கு ஏற்றவனாக நடந்து கொள்வேன்.’

இக் கடிதத்தைப் படித்த அம் மூதாட்டியார் அடிகள்பால் சிறிதளவும் வெறுப்புக்கொள்ளவில்லை. அடிகளின் வாய்மை அவருள்ளத்தை உருக்கியது. உடனே காந்தியடிகளுக்குப் பின்வருமாறு பதில் விடுத்தார் :

'உண்மையறிவிக்கும் உமது கடிதம் பெற்றேன். நானும் அப் பெண்ணும் மிகவும் மகிழ்ச்சியடைந்தோம் ; இடிஇடி யென்று சிரித்தோம். நீர் கூறும் பொய்மைக் குற்றம் மன்னிக்கற்பாலதே. ஆனால் உண்மை நிலையை எங்களுக்கு அறிவித்தது நலமேயாகும். உமக்கு நான் அனுப்பிய அழைப்பு இதனால் மாறுபடவில்லை. அடுத்த ஞாயிற்றுக்கிழமை கட்டாயமாக உம்மை எதிர் பார்க்கிறோம். உமது குழந்தை மணத்தை உம் வாயால் கேட்டுச் சிரித்து மகிழ ஆவல் கொண்டிருக்கிறோம். இந் நிகழ்ச்சிகளினால் நமது நட்புரிமை சிறிதும் பாதிக்கப்படவில்லை என்று நான் உறுதி கூறுகிறேன்.'

இக் கடிதத்தைக் கண்டதும் காந்தியடிகள் தம் உள்ளத்திலிருந்து ஒரு பெருஞ்சுமை நீங்கியதாக உணர்ந்தார். அன்றிலிருந்து சமயம் நேரும் போதெல்லாம் தாம் திருமணமானவர் என்பதை வெளியில் சொல்லத் தயங்கியதில்லை.

பள்ளி வாழ்க்கையில் தாம் ஒரு முறைகூடப் பொய் சொன்னதாக நினைவில்லை என்று காந்தியடிகள் கூறுகிறார். ஆனால் பொய் சொல்லியதாக ஒருமுறை தலைமையாசிரியரால் ஒறுக்கப்பட்டார். சனிக்கிழமை நாட்களில் காலை நேரத்தில் மட்டும் பள்ளி உண்டு. மாலையில் நான்கு மணிக்கு விளையாடுவதற்கு மட்டும் செல்லவேண்டும். ஒருநாள் கதிரவனை மேகங்கள் மறைத்திருந்த காரணத்தால் நேரம் தெரியவில்லை. அடிகளிடத்தில் காலத்தை உணர மணிப்பொறியும் இல்லை. எனவே காலம்

தாழ்த்திச் சென்றார். ஆனால் மாணவர்கள் அதற்குள் உடற்பயிற்சியை முடித்துக்கொண்டு வீடு திரும்பி விட்டனர். மறுநாள் காலை அடிகளைத் தலைமையாசிரியர் அழைத்தார். 'ஏன் நேற்று மாலையில் உடற் பயிற்சி வகுப்புக்கு வரவில்லை?' என்று கேட்டார்.

'கதிரவனைக் கருமேகம் மறைத்திருந்தபடியால் நேரம் தெரியவில்லை. காலம் தாழ்த்தி வகுப்பிற்கு வந்தேன்' என்று காந்தியடிகள் விடையளித்தார். ஆனால் தலைமை யாசிரியர் இதை நம்பவில்லை. அடிகள் பொய் புகல்வதாக எண்ணி இரண்டணு ஒறுப்புக்கட்டணம் (Fine) விதித்தார். தம் கூற்று உண்மை என்பதை எடுத்துக்காட்ட அடிகளுக்கு வழியில்லாமல் போயிற்று. தாம் ஒறுக்கப்பட்டதற்காகக்கூட அவர் வருந்தவில்லை. உண்மையை உளமாரக் கூறியும், 'பொய்யன்' என்ற தீப்பெயர் தம்மைச் சார்ந்ததே என்று எண்ணி எண்ணி உளம் நைந்தார்.

இளமையில் தம்பால் வாய்மை எவ்வாறு இடம் பெற்றது என்பதை அடிகள் தம் வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார். பள்ளியில் தாம் கற்றறிந்தவற்றைவிட, நாடகத்தின் மூலம் கற்றறிந்த உண்மைகளே தம் வாழ்வை இளமையில் செப்பனிட்டன என்று அடிகள் கூறுகிறார். அவர் குழந்தையாயிருந்தபோது பார்த்த நாடகங்களில் 'சிரவண பித்ருபக்தி நாடகம்' என்பது ஒன்று. கண்ணிழந்த முதியோர்களான தன் பெற்றோர்களைச் சிரவணன் என்பவன் காவடியில் வைத்துத் தூக்கிக்கொண்டு

சென்ற காட்சி கரம்சந்திர காந்தியின் இளம் உள்ளத்தில் நன்ருகப் பதிந்துவிட்டது. 'பெற்ற தாய்க்கும் தந்தைக்கும் இப்படியல்லவா தொண்டு செய்ய வேண்டும்?' என்று உளத்தில் தீர்மானித்துக் கொண்டார்.

அவர் பார்த்த மற்ருெரு நாடகம் அரிச்சந்திர நாடகம். அதை எத்தனை முறை பார்த்தாலும் மோகனதாசுக்குச் சலிப்புத் தட்டுவதே இல்லையாம். 'அரிச்சந்திரனைப்போல் ஏன் எல்லாரும் வாய்மையாளராக இருக்கக்கூடாது?' என்றுஅடிக்கடி எண்ணமிடுவாராம். அரிச்சந்திரன் கதையை நினைத்து நினைத்து மனமுருகி அழுவாராம். சத்தியத்தைக் காப்பாற்றுவதற்காக அரிச்சந்திரன் பட்ட துன்பங்களை யெல்லாம் தாமும் துய்க்க வேண்டும் என்ற இலட்சியம் குழந்தை காந்தியின் உள்ளத்தில் குடிகொண்டதாம்.

ஆகா! அக்குறிக்கோள் காந்தியடிகளின் வாழ்க்கையில் எவ்வளவு நன்ருக நிறைவேறி முற்றுப் பெற்றுவிட்டது! அரிச்சந்திரன் சத்தியத்துக்காகச் செய்த தியாகங்களையும் பட்ட இன்னல்களையும்விட, மகாத்மா செய்த தியாகங்களும் பட்ட இன்னல்களும் குறைந்தவை அல்ல என்று உறுதியாகக் கூறலாம். அரிச்சந்திரன் மனைவி மக்களைப் பிரிந்தான்; புலையனுக்கு அடிமைப்பட்டான். ஆனல் காந்தியண்ணலோ சத்தியத்திற்காக உயிரையும் கொடுத்தார்.

காந்தியடிகள் வாய்மைக்குக் கொண்ட பொருளும், அதைத் தம் வாழ்க்கையில் மேற்கொண்ட

முறையும் பாராட்டற்குரியன. உலகில் மற்றப் பெரியோர்கள் வாய்மையைக் கடைப்பிடித்து ஒழுகிய முறைக்கும், காந்தியடிகள் கடைப்பிடித்து ஒழுகிய முறைக்கும் சிறிது வேறுபாடு உண்டு. மற்றப் பெரியோர்கள் பொய்யாமையையே வாய்மை என்னும் அறமாகக் கொண்டனர். ஆனல் அடிகளோ, தம் மனச் சாட்சியையே வாய்மை என்னும் அறமாகக் கொண்டார். தம் மனச்சாட்சி எவைகளின்பால் மாறுபடுகிறதோ, அவைகளை யெல்லாம் பொய்மை எனக் கருதினர். தம் மனச் சாட்சிக்கு மாருகச் செய்யும் ஒவ்வொரு செயலையும், வாய்மையிலிருந்து தவறுவதாகவே கருதினர். குறிப்பாக ஒரு மேற்கோள் கூறி அதை விளக்க விரும்புகிறேன்.

இளமையிலிருந்தே காந்தியடிகள் ஆடம்பரமாக உடையணிவதில் பெருவிருப்பம்கொண்டவர். இங்கிலாந்தில் தாம் மேற்கொண்ட ஆடம்பர வாழ்வைப் பற்றிக் குறிப்பிடும்போது, ' பம்பாயிலிருந்து நான் கொண்டுவந்த உடுப்புக்கள் ஆங்கில நாகரிகத்திற் கேற்றவையல்ல வெனக் கருதி, புதிய உடுப்புகள் வாங்கினேன். பத்தொன்பது 'ஷில்லிங்' கொடுத்துச் சிறந்த தொப்பியொன்று வாங்கினேன். அக்காலத்தில் அது மிகுந்த விலையாகும். அதுவும் போதாதென்று, இலண்டனில் நாகரிக வாழ்க்கைக்கு நிலைக்களமான 'பாண்ட்' தெருவில், மாலை வேளையில் தரிக்கும் உடுப்பு ஒன்றுக்குப் பத்துப் பவுன் தொலைத்தேன். அன்பு உள்ளம் படைத்த என் தமையனு

ருக்கு எழுதித் தங்கத்திலான இரட்டைக் கடிகாரச் சங்கிலி தருவித்தேன். கடையில் செய்து விற்கும் கழுத்துச் சுருக்கு (Tie) அணிவது நாகரிகமன்றாதலால், நானே கழுத்துச் சுருக்கு தைத்துக் கொண்டேன்' என்று கூறுகிறார். ஆங்கிலக் கனவானைப்போல் நாகரிகமாக உடை உடுத்தாலன்றித் தென்னாப்பிரிக்க இந்தியருக்குத் தொண்டு செய்வது இயலாது என்றுகூட அடிகள் எண்ணினார்.

ஆனால் காலப்போக்கில் ஆடையைப்பற்றிய அவருடைய கொள்கை மாறுபடத் தொடங்கியது. தென்னாப்பிரிக்க உரிமைப் போராட்டத்தின்போது இந்தியக் கூலிகளோடு ஒன்றி வாழ நேரிட்டது. அதுபோது அவ்வேழை இந்தியக் கூலிகளில் தாமும் ஒருவராகக் கலந்துவிட்டார். அவர்கள் உடுத்த எளிய உடையான 'லுங்கி'யையும், அரைக் கைச் சட்டையையும் தாமும் உடுக்கத் தொடங்கினார். பின் இந்தியா திரும்பியபோது கத்தியவார் நாட்டு மக்களைப்போல் உடைஉடுத்தத் தொடங்கினார். நீண்ட கதர்வேட்டி, கதர்ச்சட்டை, அதன் மீது நீண்ட கைகளுள்ள கதர்க்கோட்டு, தலையில் பருத்த கதர்த் தலைப்பாகை, தோளில் கதர்த்துண்டு ஆகிய எல்லாம் அவ்வுடுப்பில் அடங்கும். இவ்வளவு சுமையைத் தூக்கிக் கொண்டு பலவிடங்களிலும் சுற்றுவது அவருக்குப் பிடிக்கவில்லையென்றாலும், நாகரிக வழக்கங்கட்கு மாறுபடாமல் நடக்க வேண்டுமென்ற எண்ணத்தினால் இவைகளனைத்தையும் சுமந்து வந்தார். இந்தியாவின் 'மான்செஸ்டர்' என்று போற்றப்படும் ஆமதா

பாத்தில், நெசவாலைத் தொழிலாளர்கள் ஒருமுறை வேலை நிறுத்தம் செய்தனர். காந்தியடிகள் அவ் வேலை நிறுத்தத்தைத் தலைமையேற்று நடத்தி வந் தார். அத்தொழிலாளர்களின் அவல நிலை அடி களின் உள்ளத்தை வாட்டியது. பிறர் ஆடை யில்லாமல் வருந்தத் தாம் மட்டும் இவ்வளவு ஆடைகளை அணிவது, அவருடைய மனச் சாட் சிக்கு ஏற்றதாகத் தெரியவில்லை.

'இவ்வேழைப் பாட்டாளிகள் உடலை மூடிக் கொள்ளப்போதிய துணியில்லாதிருக்கையில், நான் மட்டும் இவ்வளவு ஆடைகளை ஏன் சுமந்து திரிய வேண்டும்? என்னுடைய தலைப்பாகைத் துணி யைக் கொண்டு பத்துக் குல்லாய்கள் தைக்கலாமே! அது பத்துப் பேர்களுடைய தலையை மூடப் போதுமே!' என்று அடிகள் எண்ணினுர்; தம் அரைவேட்டியின் நீளத்தையும் குறைத்துக்கொண் டார்; நீளமான கோட்டைக் கழற்றி எறிந்துவிட்டு, அரைக்கைச் சட்டையை அணியலானுர். பாட் டாளிகளைப் போல் எளிய உடையை அணிந்த பிறகுதான் அவர் மனச்சாட்சி அமைதியுற்றது.

காந்தியடிகள், எளிய கதர்க் குல்லாய் அணி யத் தொடங்கியபோது, மக்களுக்கு அது வியப்பை அளித்தது. காந்தியடிகள் வெள்ளைக் குல்லாய் அணிந்து கொண்டு தெருவில் சென்றபோது மக்கள் அதைச்சுட்டிக்காட்டிச் சிரித்து, 'அதோ! காந்தி அணிந்து செல்லுகிருரே அது என்ன?' என்று கேட்பார்கள். சில குறும்புக்காரர்கள், 'இது குல்லாயா அல்லது காசிப் பண்டாக்கள் அணியும்

காது மூடியா ?" என்று கேலி செய்வார்கள். ஆனால் அக் குல்லாய் 'வாய்மையின் அறிகுறி' என்று அடிகள் விளக்கம் தந்தார். வண்ணக் குல்லாய் களை யணிந்தால், அதில் படியும் அழுக்குத் தெரி யாது. அதே போலப் பொய்மை படிந்த உள்ளத் தவரும், வாய்மையாளராக வெளியில் தென்படுவர். வெள்ளைக் குல்லாயில் சிறிது அழுக்குப் படிந் தாலும் பளிச் சென்று தெரியும். உடனே அவ்வழுக் கைப் போக்கிக்கொள்ள வேண்டும் என்ற உணர் வும் ஏற்படும்; அதே போல வாய்மையாளர், தம் உள்ளத்தில் சிறிது பொய்மை யழுக்குப் படிந் தாலும் உடனே போக்கிக் கொள்வர்.

காந்தியடிகள் 'கதர்ப் பிரசாரம்' செய்வதற்காக ஒரு முறை தமிழ் நாடு போந்தார். மதுரையில் தங்கி யிருந்தபோது, பலரும் அவரைக் காண வந்தனர். வந்தவர்களில் ஒரு நண்பர் வெளிநாட்டுத் துணியை அணிந்திருந்தார். நண்பரின் செயல் காந்தியடிகள் உள்ளத்தை உறுத்தியது. தாம் மேற் கொண்ட 'கதர்ப் பிரசாரம்' எதிர்பார்த்த அளவு பயன் விளைக்கவில்லை என்பதை உணர்ந்தார். அந் நண்பரைப் பார்த்து, 'நீர் என்னைப் பார்க்கவந்து என்ன பயன் ? கதர் உடுக்காமல் வந்திருக்கிறீரே!' என்று அடிகள் வினவினார். ஆனால் அந்நண்பரோ, கதர் கிடைக்கவில்லை என்று கூறினார். இவ்விடை அடிகளின் உள்ளத்தைச் சிந்தனையில் சாய்த்தது. கதரின் பற்றுக்குறையைப் போக்கத் தம்முடைய ஆடையை இன்னும் குறைத்துக் கொள்ள விரும்பினார்.

தமிழகச் சிற்றூர்களின் வழிச் சென்ற காலை, அங்குள்ள வயற்புறங்களில் வேலை செய்வோர் கோவணம் மட்டுமே அணிந்திருப்பதை அடிகள் கண்டார். இக்காட்சி அவருக்கு வியப்பாக இருந்தது; வட நாட்டில் உழவர்களும் கூடச் சட்டை அணிவது வழக்கம். தம் அருகிலிருந்த தமிழ் நண்பர்களை இதுபற்றிக் கேட்டார். 'அக்கோவணத்தைத் தவிர வேறு ஆடை வாங்குவதற்கு அவர்களிடம் பணம் ஏது?' என்று அந்நண்பர்கள் கூறினார்கள். சொந்த நாட்டுச் சோதரர்கள் மானங் காக்கப் போதிய துணியின்றி வாடத் தாம் மட்டும் வேட்டியும் சட்டையும் அணிவது அவருக்குப் பெரும் பாவமாகப் பட்டது. மனச் சாட்சி அவருள்ளத்தை வாள்கொண்டு அறுத்தது. அன்றிலிருந்து அவர் ஒரு முடிவுக்கு வந்தார். 'இனி இடையில் ஒரு முழத்துணியே அணிவேன். குளிர் காலத்தில் மட்டும் என் உடலை மூடிக்கொள்ள ஒரு போர்வையைப் பயன் படுத்துவேன்' என்று நண்பர்களிடம் கூறினார். இறக்கும் வரையில் அடிகள் அவ்வுறுதியிலிருந்து தவறவில்லை. கொடுங்குளிர் நாடான இங்கிலாந்து சென்ற போதும், அம்முழத் துண்டுடனேயே சென்றார். இங்கிலாந்தின் பேரமைச்சரா யிருந்த சர்ச்சில் கோமகனார் அடிகளை, 'அரை நிர்வாணப் பக்கிரி' (Half Naked Fakir) என்று இகழ்ந்தார். காந்தியடிகள் அவ்விகழ்ச்சியை ஒரு பொருட்டாகக் கருதவில்லை. அடிகளின் வாய்மை இவ்வாறு விரிவு பெறுகிறது.

இந்திய மக்கள் மேலை நாட்டினரைப் போல் ஆடை அணிவது, இந்தியப் பண்பாட்டிற்கும், தட்பவெப்ப நிலைக்கும், தேசிய உணர்வுக்கும் மாறுன செயல் என்று அடிகளின் மனச்சாட்சி அறிவுறுத்தியது. சமயம் நேரும் போதெல்லாம் அடிகள் இக்கொள்கையை வற்புறுத்தத் தயங்கியதில்லை. காசியிலுள்ள இந்துப் பல்கலைக் கழகத்தைப் பற்றி எல்லாரும் அறிவர். அது சிறந்த பல்கலைக் கழகம் என இந்திய மக்களால் கருதப்படுகிறது. அதைத் தோற்றுவித்து முன்னுக்குக் கொண்டு வந்தவர் பழம்பெரும் தேச பக்தரும் பேரறிவாளருமான பண்டித மதன மோகன மாளவியா என்பவர். அப்பல்கலைக் கழகத்திற்கு நிதி திரட்டும் நோக்கத்தோடு அவர் ஒரு விழாக் கொண்டாடினர். அவ் விழாவிற்குத் திருவாட்டி அன்னி பெசண்ட் அம்மையாரும், பல சுதேச மன்னர்களும் வந்திருந்தனர். சுதேச மன்னர்கள் அப்போது அணிந்திருந்த ஆடை அலங்காரம் அடிகளின் உள்ளத்தில் அருவருப்பை விளைவித்தது. அவர்கள் மேலை நாட்டு உடையணிந்திருந்ததோடு, இடையில் வைர மிழைத்த பட்டாக் கத்திகளும், கழுத்தில் முத்துக் கோவைகளும், நவமணிகள் பதித்த பொன்னரி மாலைகளும் அணிந்திருந்தனர். அடிகள் அப்போது வெறும் 'காந்தி'யாக இருந்த காலம். 'மகாத்மா'வாக இன்னும் மாறவில்லை.

பண்டித மாளவியா பலரையும் பேசுமாறு அழைத்தார். காந்தியடிகளின் முறை வந்தது. தம்

சொற்பொழிவினிடையே, 'இச் சுதேச மன்னர்கள் ஏன் வெள்ளையரின் வேலைக்கார (Butler) ரைப் போல் விநோத உடையணிய வேண்டும்? அவர்கள் தோற்றம், கூர்ச்சர நாட்டு வயல் வெளி களில் திரியும் குரங்குகளைப் போல் இருக்கிறது' என்று கூறி விட்டார். அன்னிபெசண்ட் அம்மை யாருக்கு அடங்காத கோபம். மன்னர்களின் கோபத்திற்குக் கேட்க வேண்டுமா? உடனே அரசர் கூட்டம் ஆத்திரத்தோடு வெளியேறியது. பண்டித மாளவியாவோ, 'அரசர் பெருமக்களே! அரசர் பெருமக்களே!' (Your Highnesses) என்று அலறி யடித்துக் கொண்டு அரசர்களின் பின்னால் ஓடினார். ஆனால் அவர் அலறல், அரசர் பெரு மக்களின் செவிகளுக்கு எட்டவில்லை.

வாய்மையில் உறுதிகொண்ட காந்தியடிகள் வழக்கறிஞராக எவ்வாறு பணிபுரிந்தார் என்று பலருக்குப் புரியாத புதிராக இருக்கும். ஏனென்றால், பொய் பேசத்தெரியாதவன் வழக்கறிஞனாக இருக்க முடியாது. குற்றமற்றவனைக் கூடக் கூண்டிலேற் றிக் கொலைத் தண்டனை வாங்கிக் கொடுக்க அவர் கள் அஞ்சுதல் கூடாது. பொய்யை அழகாகவும், திறமையோடும் பேசுபவன் சிறந்த வழக்கறிஞ னாகச் சமுதாயத்தால் கருதப்படுவான். அத்தொழி லிலும் காந்தியடிகள் வாய்மையைக் காப்பாற் றினார். தம்மிடம் வரும் வழக்கில் நேர்மையிருந்தா லன்றி, அடிகள் அதை ஏற்றுக்கொள்ள மாட்டார். தென்னாப்பிரிக்காவில் திருவாளர் ரஸ்டம்ஜி என்ற ஒரு பாரசீக நண்பர் இருந்தார். அவர், அடிகளின்

தென்னாப்பிரிக்க வாழ்க்கையில் நெருங்கிய தொடர்பு கொண்டவர்; கெழுதகை நண்பர்; காந்தியடிகளின் உயிருக்கு ஆபத்து நேர்ந்த காலத்தில் உடனிருந்து காத்தவர்; பெரு வணிகர். வெளி நாட்டிலிருந்து கள்ளத்தனமாகச் சரக்குகளை இறக்குமதி செய்தார் என்று தென்னாப்பிரிக்க அரசாங்கம் அவர்மேல் ஒரு வழக்குப் பதிவு செய்திருந்தது; ரஸ்டம்ஜி அடிகளின் உதவியை நாடினார். ஆனால் காந்தியடிகள் மனச் சாட்சி அவ்வழக்கை ஏற்று நடத்த இடம் தரவில்லை. அக்குற்றத்தை ஏற்றுக் கொண்டு அரசியலாரிடம் மன்னிப்புப் பெறுதலே அறம் என்பதை அடிகள் ரஸ்டம்ஜிக்கு வற்புறுத்தினார். அதற்குத் தாமே துணை புரிவதாகச் சொன்னார். சுங்கத் துறைத் தலைவரை நேரில் கண்டு, நிலைமையை எடுத்துக் கூறி மன்னிப்பும் வாங்கிக் கொடுத்தார். இவ்வாறு அண்ணலின் செயல்கள் யாவும் "வாய்மை! வாய்மை!" என்றே முழக்கமிட்டன. அதனாற்றான் பெருநாவலர் அருளிச் செய்த,

> "உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
> உள்ளத்து ளெல்லாம் உளன்"

என்ற அருங்குறளுக்கு, அண்ணல் இலக்கியமாக விளங்க முடிந்தது.

∴

# 3. சமயம்

வள்ளுவர் எச்சமயத்தைச் சார்ந்தவர் என்ற ஆராய்ச்சி இன்னும் முற்றுப் பெறவில்லை. எல்லாச் சமயக் கொள்கைகளும் வள்ளுவர் வகுத்த வான் குறளில் படிந்திருக்கக் காணலாம். அதனாற்றான் ஒவ்வொரு சமயத்தானும் வள்ளுவரைத் தனக்குரி மையாக்கிக் கொள்ள முயல்கிறான். கொல்லாமை, இன்னா செய்யாமை, அவாவறுத்தல், புலான் மறுத்தல் முதலிய பேரறங்கள் யாவும், தம்முடைய சமயக் கொள்கைகளே என்றும், அவ்வறங்களை வற்புறுத்திக் கூறிய செந்நாப்புலவர் தம்முடைய சமயத்தைச் சார்ந்தவரே என்றும் பௌத்த, சமண சமயப் பெரியார்கள் வாதிடுகின்றனர். உரைகளில் தொன்மை சான்ற 'மணக்குடவர் உரை' சமண சமயச் சார்புடையது. அச்சமயக் கொள்கைகளே யாண்டும் அவ்வுரையில் வற்புறுத்திச் சொல்லப் படுகின்றன. அன்புடைமை, அருளுடைமை, புலான் மறுத்தல் முதலிய அறங்கள், சைவ சமயத்தின் அடிப்படைக் கொள்கைகள். 'அன்பே சிவம்' என்றல்லவோ அச்சமயம் முழங்குகிறது. அவர்களும் குறளின்பால் சொந்தம் பாராட்டுவதற்கு உரிமையுடையவர்களே. பரிதியார் திருக்குறளுக்கு

எழுதிய உரையில், சைவ மணம் கமழக் காண லாம்.

"தாமரைக் கண்ணன் உலகு"—என்று 'புணர்ச்சி மகிழ்தல்' என்ற அதிகாரத்தில் ஒரு குறளில் உள்ளது. 'தாமரைக் கண்ணன் உலகு' என்பதற்குச் 'செங்கண்மால் உலகம்' என்று பரிமேலழகரும், 'இந்திரன் உலகு' என்று மணக்குடவரும் உரை கூறுகின்றனர். 'தாமரைக் கண்ணன் என்பது இந்திரனுக்குப் பெயரன்று' என்று பரிமேலழகர் மறுத்துரைக்கிறார். இச் சொற்றொடரை உறுதியாகப் பிடித்துக்கொண்டு நிற்கின்றனர் வைணவப் பெரியார்கள். திருக்குறளில் எங்கும் வேறு கடவுளரின் பெயர்கள் குறிப்பிடப்படவில்லை. 'தாமரைக் கண்ணன்' தான் குறிப்பிடப்படுகிறான். ஆகையினால் வள்ளுவர் வைணவராகத்தான் இருக்கவேண்டும் என்று வாதிடுகின்றனர் வைணவப் புலவர்கள். வாதிடுவதோடு அமையாமல், ஒரு வைணவ அறிஞர் வள்ளுவத்திற்கு வைணவ மரபுப்படி உரையும் வகுத்துள்ளார். அந்நூலின் முகப்பில், திருமண் சார்த்திக்கொண்டு, வைணவக் கோலத்தோடு வள்ளுவர் பெருமான் காட்சியளிக்கிறார். அதே போல, சைவ சமயத்தார் வெளியிட்டுள்ள திருக்குறளின் முகப்பில், வள்ளுவர் வெந்த வெண்ணீறணிந்து விரிசடைக் கடவுளின் அடியவர் கோலத்தோடு விளங்குகிறார். சைவப் புலவர்கள் வள்ளுவரின் கடவுள் வாழ்த்துக் குறட் பாக்களுக்குத் தங்கள் சமயக் கருத்துப் புலப்படுமாறு உரை கூறுகின்றனர்.

பௌத்தம், சமணம், சைவம், வைணவம் யாவும் நம் நாட்டில் தோன்றிய சமயங்கள். ஆனால் கடல் கடந்து வந்து, நம் கன்னித் தமிழ கத்தில் குடியேறிய கிருத்தவமும் குறளின் பால் சொந்தம் பாராட்டுகிறது. கி. பி. மூன்றாம் நூற் றாண்டிலேயே சிரியக் கிருத்தவர் (Syrian Chris-tians) தமிழகத்தில் போந்து, மேற்குக்கரைப் பகுதி களில் தம் மதக் கொள்கைகளைப் பரப்பினர். அக் கொள்கைகளே திருக்குறளில் இடம் பெற்றுள்ளன என்று அவர்களும் கருதுகின்றனர். தமிழகத்தில் நெடுங்காலம் வாழ்ந்த பேரறிஞரும், திருக்குறள், நாலடியார், திருவாசகம் முதலிய அருநூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த பெருந்தகையாள ரும், தம் கல்லறையின் மீது 'ஒரு தமிழ் மாணவன்' என்று எழுதும்படி பணித்த சொல்லேருழவரு மான ஆங்கிலப் பெருமகனார் போப், 'திருக்குறள் ஏசுநாதர் அருளிய மலைப்பிரசங்கத்தின் எதிரொலி' என்று எழுதிப் போந்தார். இனி இசுலாமியரும் திருக்குறளை எடுத்து வைத்துக்கொண்டு ஆராய்ந் தால், குர்ஆன் கருத்துக்கள் அதில் தென்படாமல் போகா.

இவ்வாறு சமயப் போராட்டத்தில் வள்ளுவர் சிக்கித் தவித்தாலும், ஒரு சிறந்த உண்மை நம் உள்ளத்திற்குப் புலப்படுகிறது. 'வள்ளுவர் எல்லாச் சமயத்தார்க்கும் உரியவர்' என்பதுதான் அந்த மேலான உண்மை. இவ்வுண்மையைப் பண்டைக் காலத்தில் வாழ்ந்த கல்லாடர் என்ற புலவர் பெருந் தகையும் பின்வருமாறு எடுத்தியம்புகிறார் :

"ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
அன்றென்ப ஆறு சமயத்தார்—நன்றென
எப்பாலவரும் இயைபவே வள்ளுவனர்
முப்பால் மொழிந்த மொழி."

∴ ∴ ∴

'சமயக் கணக்கர் மதிவழி கூறாது
உலகியல் கூறிப் பொருளிது வென்ற
வள்ளுவன் ... ... ...'

'எல்லாவற்றினின்றும் நல்லன எடுத்தோது தல் வள்ளுவர் மதம்' என்றார் பிறரும். இஃது நூலுக்கே யன்றிச் சமயத்திற்கும் பொருந்தும். ஏனென்றால் அறநூல்கள் பலவும் பெரும்பாலும் சமயச் சார்பு கொண்டே விளங்குகின்றன. வள்ளுவர் பல சமய நூல்களிலும் பயிற்சி கொண்டவர். அவ்வச் சமயங்களில் படிந்துள்ள உயர்கருத்துக் களை யெல்லாம் திரட்டித் தம் அறிவிற்கும் மனச் சாட்சிக்கும் ஏற்பத் தமிழர் பண்பாட்டினின்றும் வழுவாமல், இவ்வற நூலை எழுதினார் என்று கொள் வதில் எவ்விதத் தவறும் இல்லை.

திருக்குறளின் முதலில் அமைந்துள்ள 'கடவுள் வாழ்த்து' என்ற அதிகாரமே அவருடைய சமயப் பொதுமையை விளக்கும். அவ்வதிகாரத்தில் சிவ னைப் பற்றியோ, திருமாலைப் பற்றியோ, அருகனைப் பற்றியோ, புத்தனைப் பற்றியோ கூறப்படவில்லை. 'ஆதிபகவன்', 'வாலறிவன்', 'மலர்மிசை ஏகினான்', 'வேண்டுதல் வேண்டாமையிலான்', 'இறைவன்', 'பொறிவாயில் ஐந்தவித்தான்', 'தனக்குவமை

யில்லாதான்' 'அறவாழி அந்தணன்,'' எண் குணத் தான்' என்ற தொடர்களே கடவுளைக் குறிப்பிடு கின்றன. இச்சொற்றொடர்கள் எல்லாச் சமயக் கடவுள்களுக்கும் பொருந்தும். இனி வள்ளுவரின், சமயக் கொள்கைகள் காந்தியத்தோடு எவ்வாறு பொருந்துகின்றன எனக் காண்போம்.

தமக்குச் சமயத்தைப் பற்றிய சிந்தனைகள் எப் பொழுது தோன்றின என்பது பற்றிக் காந்தி யடிகள் 'சமயத் தோற்றங்கள்' என்ற தலைப்பில் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்; அத் தலைப்பின் கீழ், இளமைக் காலத்தில் தம் உள்ளத்தில் ஏற்பட்ட நிலையற்ற சமயக் கருத்துக்களைப் பற்றிக் கூறிக் கொண்டு செல்கிறார்; பள்ளியில் சமயத்தைப் பற்றி எதுவும் அக் காலத்தில் சொல்லிக்கொடுக்கப்படா ததைப் பெரும் குறையாக எண்ணுகிறார். காந்தி யடிகள் குஜராத்தி நாட்டு மோடபனியா வகுப் பைச் சார்ந்தவரென்றும், அவ்வகுப்பினரெல்லாம் வைணவ சமயத்தில் பெரும் பற்றுக் கொண்ட வர்களென்றும் முதலிலேயே குறிப்பிட்டேன். அக்குல வழக்கத்திற் கேற்பக் காந்தியடிகளும் அடிக்கடி திருமாலின் கோவிலுக்குச் செல்வது வழக்கம். அடிகளுக்குப் பேய் பிசாசுகளைப் பற்றிய அச்சம் இளமையில் இருந்தது. அவ்வச்சத்தைப் போக்கிக்கொள்ள, வீட்டு வேலைக்காரி அரம்பை யின் அறிவுரைப்படி, இராமநாமத்தைப் பாரா யணம் செய்யத் தொடங்கினர். அதன் பிறகு பேய் பிசாசுகளைப் பற்றிய அச்சமும் அவருள்ளத்தை விட்டு நீங்கியதாம். எனவே, அவர் பிற்காலத்தில்

நாள்தோறும் மேற்கொண்ட இராமபஜனைக்கு, இளமையிலேயே வித்தூன்றப்பட்டது என்பதை அறியலாம். போர்பந்தரில் வாழ்ந்தபோது அவருடைய வீட்டில் நாள்தோறும் அவர் தந்தையின் முன்னால் இராமாயணம் படிக்கப்படுவதுண்டாம். இராச கோட்டையில் பாகவதம் படிக்கப்பட்டதாம். இவைகளைக் கேட்டதனால் இராமாயணம், பாகவதம் ஆகிய நூல்களின்பால் இளமையிலேயே தமக்குப் பற்று ஏற்பட்டது என்று காந்தியடிகள் கூறுகிறார்.

காந்தியடிகளின் பெற்றோர்கள் வைணவர்களாக இருந்தாலும், சிவன் கோவிலுக்கும் வழக்கமாகச் செல்வதுண்டு. சைவ சமய நோன்புகளையும் அவருடைய தாயார் மேற்கொண்டு ஒழுகுவாராம். சமணப் பெரியார்களும் அடிகளின் இல்லத்திற்கு அடிக்கடி வருவார்கள். காந்தியடிகளின் தந்தையாருக்கு இசுலாமிய நண்பர்களும், பாரசீக நண்பர்களும் பலருண்டு. அவர்களும் வீட்டுக்கு அடிக்கடி வருவார்கள். சமயங்களைப்பற்றிய உரையாடல் நடைபெறும். நோய்வாய்ப்பட்டிருந்த தம் தந்தைக்குப் பணிவிடை செய்து கொண்டே, மோகனதாஸ் காந்தி மேற்படி உரையாடல்களைக் கவனமாகக் கேட்பார். இதன் பயனாக, 'எல்லாச் சமயங்களும் கடவுளுக்கு ஏற்ற சமயங்களே' என்ற உறுதியான நம்பிக்கை அவருக்கு இளமையிலேயே ஏற்பட்டது.

ஆனால் கிருத்தவ சமயத்தின் மேல் மட்டும் காந்தியடிகளுக்கு அந்நாளில் சிறிது வெறுப்பு ஏற்பட்டிருந்தது. இதற்குக்காரணம், பள்ளிக்கூடத்

துக்கு அருகில், தெரு மூலைகளில் நின்று கொண்டு கிருத்தவப் பாதிரிமார்கள் செய்த சொற்பொழிவு கள் தாம். இந்து சமயத்தையும், அச்சமயக் கடவுளர்களையும் அப்பாதிரிமார்கள் இகழ்ந்து பேசி யதைக் காந்தியடிகளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. இதே காலத்தில் ஓர் இந்து நண்பர் கிருத்தவ சமயத்தைத் தழுவியதுபற்றிக் காந்தி யடிகள் கேள்விப் பட்டார். அந்த நண்பர் கிருத்தவரானவுடனே மாட்டிறைச்சி தின்னவும், சாராயம் குடிக்கவும், மேலை நாட்டினரைப்போல் உடைகளணியவும் தொடங்கி விட்டாராம்; அதோடு இந்து சமயத்தையும் இந்திய நாட்டை யும் இகழ்ந்து பேசத் தலைப்பட்டாராம். இவற்றை யெல்லாம் அறிந்ததும், 'கிருத்தவ சமயமும் ஒரு சமயமா? இதற்குச் சமயம் என்ற பெயரே தகாது' என்று எண்ணினாராம். ஆனால் பிற்காலத் தில் மேற்படி காரியங்கட்கெல்லாம் கிருத்தவ சமயம் பொறுப்பில்லை என்றும், கிருத்தவ சமயச் சொற்பொழிவாளர்களே காரணம் என்றும் காந்தி யடிகள் அறிந்து கொண்டார். கிருத்தவ சமயம் அடிகளின் வாழ்வில் எவ்வாறு தொடர்பு கொண் டிருந்தது என்பதைப் பற்றிப் பின்னர் அறிவோம்.

காந்தியடிகள் இங்கிலாந்தில் படித்துக்கொண் டிருந்தபோது, பிரம்ம ஞான சங்கத்தைச் சேர்ந்த இரு ஆங்கில நண்பர்கள், அவருக்கு அறிமுக மானார்கள். அப்போது பகவத் கீதையைப்பற்றிய பேச்செழுந்தது. 'நீர் பகவத்கீதை படித்திருக் கிறீரா?' என்று அந்த நண்பர்கள் கேட்டார்கள்.

ஆனால் பகவத்கீதையோடு அடிகளுக்கு ஈடுபாடு கிடையாது. எனவே, அடிகளையும் தம்முடன் கீதை படிக்க வருமாறு அந்த நண்பர்கள் அழைத்தார்கள். வெளி நாட்டு மக்கள், தம் தாய் நாட்டு நூலான கீதையைப் படிக்க அழைத்தபோது, அடிகள் உண்மையாகவே வெட்கமடைந்தார்; பிறகு, 'சர் எட்வின் ஆர்னல்டு' என்பவரால் எழுதப்பட்ட கீதையின் ஆங்கில மொழிபெயர்ப்பைப் படித்தார்; பின்னர்க் கீதையின் சமஸ்கிருத மூலத்தையும், குஜராத்தி மூலத்தையும் படிக்கத் தொடங்கினர்; அதிலிருந்து கீதைஅடிகளின் வாழ்வோடு பிரிக்க முடியாதபடி ஒன்றி விட்டது.

மேற்கூறிய நண்பர்கள் இருவரும் காந்தியடிகளையும் பிரம்மஞான சங்கத்தில் சேருமாறு வற்புறுத்தினர்கள். 'என்னுடைய சொந்தச் சமயத்தைப் பற்றியே நான் இன்னும் சரியாகப் புரிந்து கொள்ளாதிருக்கையில், பிற சமயக் கழகம் எதிலும் சேரவிரும்பவில்லை' என்று அடிகள் மறுத்துக் கூறிவிட்டார்; பிறகு பிரம்ம ஞான சங்க நூல்களையும் இந்து சமய நூல்களையும் படித்தார். இந்து சமயத்தில் குருட்டு நம்பிக்கைகளே மிகுந்திருக்கின்றன வென்று, பாதிரிமார்களின் பிரசாரத்தினல் ஏற்பட்ட தவருன கொள்கை அடிகளின் உள்ளத்திலிருந்து மறைந்தது.

ஒருநாள் மான்செஸ்டரிலிருந்து வந்த உத்தமக் கிருத்தவர் ஒருவரை அடிகள் சந்தித்தார். அதுவும் இலண்டன் மாநகரிலிருந்த சைவ உணவு விடுதியில் சந்தித்தார். கிருத்தவ சமயத்தைப்

பற்றித் தம் உள்ளத்தில் கொண்டிருந்த ஐயப்பாடு களை யெல்லாம் அந்நண்பரிடம் கேட்டார்; மது வருந்துவதும், புலாலுண்பதும் கிருத்தவ மதக் கொள்கைகளா ?' என்று அந்நண்பரிடம் வின விஞர்; இராசகோட்டையில் கிருத்தவப் பாதிரிமார் பிற சமயங்களை இழித்துப் பேசியதை யெல்லாம் எடுத்தியம்பிஞர். அடிகளின் சொற்களைக் கேட்ட அந் நண்பர் மிகவும் வருந்திஞர். 'நான் புலால் உண்பதில்லை; மது அருந்துவதில்லை. கிருத்தவர் பலர் புலால் உண்பதும், மதுவருந்துவதும் உண்மையே. ஆஞல் எங்கள் சமய நூலில் மதுவும் புலாலும் அருந்தும்படி கட்டளையிடப் படவில்லை. அருள் கூர்ந்து விவிலிய நூலைப் படியுங்கள்' என்று அந்நண்பர் கூறிஞர். அவரே விவிலிய நூலின் படிவம் ஒன்றை அடிகளுக்கு வாங்கிக் கொடுத்தார்; விவிலிய நூலின் புதிய ஏற்பாட்டில் (New Testament) உள்ள 'மலைச் சொற்பொழிவு' (Sermons on the mount) அடிகளின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. எட்வின் ஆர்ஞல்டு எழுதிய 'ஆசியசோதி' (Light of Asia) என்ற நூலையும், கார்லைல் என்பார் எழுதிய 'வீரரும் வீர வழிபாடும்' என்ற நூலையும் காந்தியடிகள் படித்தார். அவ்விரண்டு நூல்களும் முறையே புத்தர் வரலாற்றையும், முகம்மது நபி யின் வரலாற்றையும் கூறுகின்றன. அக்காலத்தில் சார்லஸ் பிராட்லா என்ற பேரறிஞர் இங்கிலாந்தில் வாழ்ந்தார். அவர் பெரிய நாத்திகர். நாத்திக சமயத்தைப் பற்றியும் அறிந்து கொள்ளவேண்டும் என்ற எண்ணத்தோடு, அவர் எழுதிய நூல்களை

யும் அடிகள் படித்தார்; இவ்வாறு பல சமயங்களைப் பற்றியும் நன்கு அறிந்து கொண்டார்.

காந்தியடிகளுக்குத் தென்னாப்பிரிக்காவில் பல கிருத்தவ நண்பர்கள் ஏற்பட்டனர். அவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் திருவாளர் பேகர், ரெவரண்ட் ஆண்ட்ரூ, திருவாளர் டோக், திருவாளர் போலக், திருவாளர் காலன் பேக் என்பவர்கள். இந்தியாவில் அடிகளின் சிறந்த நண்பரான தீனபந்து ஆண்ட்ரூசை அறியாதார் யார்? பிரெஞ்சு நாட்டுப் பேரறிஞரும், அடிகளைப்பற்றி அரிய நூல் எழுதியவருமானரோமன் ரோலண்டு கிருத்தவரே. அடிகளின் அடித் தொண்டராகப்பணியாற்றிவந்த 'மீராபென்' என்பவர், ஆங்கில நாட்டைச்சேர்ந்த கிருத்தவப் பெண்மணியே ஆவார். தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்த கிருத்தவ நண்பர்கள், காந்தியடிகளை எவ்வாறேனும் கிருத்தவ சமயத்தில் சேர்த்துவிட வேண்டுமென்று பெருமுயற்சி செய்தனர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர் மர்ரே பாதிரியார். அவர் அடிகளைக் கிருத்தவ சமய மாநாடுகட்கெல்லாம் அழைத்துச்சென்றார். ஆனால் எதுவும் அடிகளின் உள்ளத்தை மாற்றவில்லை.

கிருத்தவ நண்பர்கள் காந்தியடிகளைத் தங்கள் சமயத்தில் சேர்த்துக் கொள்ள முயன்றதுபோலவே இசுலாமிய நண்பர்களும் முயற்சி செய்தனர். இசுலாமிய நூல்களைப் படிக்குமாறு அப்துல்லா சேத் அடிக்கடி அடிகளுக்குக் கூறுவார். காந்தியடிகளும் 'சேல்' என்பாரின் குர்ஆன் மொழி பெயர்ப்

யையும் இசுலாத்தைப் பற்றிய வேறு சில நூல்களை யும் வாங்கிப் படித்தார். சமயம் நேரும்போதெல் லாம் இசுலாத்தின் பெருமையை எடுத்துக்கூறிக் காந்தியடிகளைத் தம் சமயத்தின்பால் அப்துல்லா சேத் இழுக்க முயன்றார். இச்சமயங்களில் எல்லாம் தம் உள்ளத்தில் எழுந்த எண்ணங்களை அடிகள் பின்வருமாறு குறிப்பிடுகிறார் :

'கிருத்தவ சமயக் கொள்கைகளில் எனக்குப் பல ஐயப்பாடுகள் எழுந்தன. ஏசுநாதர் ஒருவரே கடவுளின் அவதாரப் புதல்வர் என்றும், அவரிடம் நம்பிக்கை வைப்போர் மட்டும் வீடுபேற்றைப் பெறுவர் என்றும் அச்சமயத்தார் கூறிய சொற்களை என்னால் நம்ப முடியவில்லை. கடவுளுக்கு மக்கள் இருக்கக்கூடுமானால், நாம் எல்லோரும் அவ ருடைய மக்களே. ஏசுநாதர் கடவுளைப் போன்றவ ரானால், அல்லது கடவுளேயானால், உலக மக்கள் எல்லோரும் கடவுளைப்போன்றவராகவோ அல்லது கடவுளேயாகவோ ஆதல் கூடும். ஏசுநாதர் தம் இறப்பினால், தாம் வடித்த குருதியால், உலகத்தின் பாவங்கள் எல்லாவற்றிற்கும் கழுவாய் தேடி விட் டார் என்பதை என் அறிவு அப்படியே ஒத்துக் கொள்ளத் தயாராயில்லை. இக்கொள்கையை அப் படியே எடுத்துக் கொள்ளக்கூடாதென்றும், உட் கருத்தை நோக்க வேண்டுமென்றும் எனக்குத் தோன்றியது. மற்றும், மக்களினத்திற்கே ஆன்மா உண்டு என்பதும், மற்ற உயிரினங்களுக்கு ஆன்மா கிடையாதென்பதும், அவை சாவின்போது அடி யோடு அழிந்துவிடுகின்றன என்பதும் கிருத்தவக்

கொள்கை. ஆனால் எனது கொள்கை இதற்கு முற்றிலும் மாறுபட்டது. ஏசுநாதரை நான் தியாக மூர்த்தி என்றும், வாய்மைக்காக உயிர் துறந்த பெருந்தகை என்றும், கடவுள் தன்மை பொருந்திய சமயகுரவர் என்றும் ஒப்புக்கொண்டேன். ஆனால், உலகிலேயே இதுகாறும் பிறந்தவர்களுள் ஏசு நாதர் ஒருவரே 'மகான்' என்பதை என்னால் ஒத்துக் கொள்ள முடியவில்லை. சிலுவையில் அவர் உயிர் நீத்தது உலகுக்கு ஓர் அரிய எடுத்துக்காட்டாகும். ஆனால் அதில் எல்லை மீறிய விந்தை ஏதும் இருப்ப தாக என் உள்ளம் ஏற்றுக் கொள்ளவில்லை. ஏசு நாதரைப் போலத் தூய வாழ்வும் தன்னல மறுப்பும் கொண்ட பெரியார்களும், விந்தைகளை நிகழ்த்திய மகான்களும் எல்லாச் சமயத்திலும் இருந்திருக் கின்றனர். கிருத்தவ சமயத்தில் பாவிகள் நல்லோர் களாவது குறித்து நான் கேள்விப்பட்டதுபோலவே மற்றச் சமயங்களிலும் மக்கள் சீர்திருந்தியிருப் பதைப் பார்த்திருக்கிறேன். தத்துவத் துறையில் பார்க்குங்கால், கிருத்தவ மதக் கொள்கைகள், பிற மதக் கொள்கைகளைவிட உயர்ந்தவை என்று கூறி விட முடியாது. தன்னல மறுப்பை முன்னிட்டுப் பார்க்கையிலோ, இந்துக்கள் கிருத்தவர்களிலும் பெரிதும் மேம்பட்டவர்கள் என்று தோன்றிற்று. கிருத்தவ சமயத்தை முழுதும் நிறைவுபெற்ற சமயம் என்றோ, எல்லாச் சமயங்களிலும் தலைசிறந்த தொன்றென்றோ என்னால் ஒப்புக் கொள்ள முடிய வில்லை.

'ஆனால், இந்து சமயமும் முழுதும் நிறைவு பெற்ற சமயமென்று நான் உறுதியாகக் கூற முடி

யாது. இச்சமயத்திலும் பல குறைகள் என் கண் முன்னே நன்ருகப் புலப்பட்டுக் கொண்டிருக்கின் றன. தீண்டாமை இந்து சமயத்தின் ஒரு பகுதி யானுல், அது அழுகிப்போன பகுதியாகவே இருக்க வேண்டும். பற்பல சாதிகள், கோட்பாடுகள் முத லிய பிரிவுகளின் நீதியும் எனக்குப் புலனுகவில்லை. மறைகள் யாவும் இறைவனுல் வெளியிடப் பட்டவை யெனில், விவிலிய நூலும், குர்ஆனும் ஏன் அத்தகையனவாக இருக்கக்கூடாது?'

அடிகள் வாழ்வின் முற்பகுதியில், அவருள்ளத் தில் சமயத்தைப்பற்றி எழுந்த எண்ண அலைகளைக் கண்டோம். இவற்ருல் நாம் அறிவது யாதெனில் எல்லாச் சமயங்களிலும் படிந்துள்ள உயர்ந்த கொள்கைகளே அடிகளின் உயர்ந்த சமயமாக இருக்க முடியும் என்பதாகும். அதன் விரிவைப் பின்னர்க் காண்போம்.

அடிகளைப் பார்த்து, 'நீர் எச்சமயத்தைச் சார்ந் தவர்?' என்று கேட்டால், 'நான் வைணவன்' என்று தயங்காமல் கூறுவார். அவரை அறியா தார்க்கு, அடிகளின் விடை வியப்பை ஊட்டலாம். ஏனெனில் காந்தியடிகள் திருமால் கோவிலுக்கும் செல்லுவதில்லை; வீட்டிலேயும் இறைவனின் திரு வுருவத்தை வைத்து வழிபாடு நிகழ்த்துவதில்லை. வைணவனுக்குரிய துளசிமணி மாலையை அவர் கழுத்தில் காணமுடியாது. அடிகளின் வைணவம் உயர்வு தாழ்வற்றது; தீண்டாமையைத் தீதென வெறுப்பது; வடகலை தென்கலைச் சண்டைகளுக்கு

அப்பாற்பட்டது. உண்மை வைணவன் யார் என்பதை அவரே விளக்குகிறார்.

காந்தியடிகளின் வழிபாட்டுப் பாடல்களில் உள்ளத்தை உருக்கும் தன்மையது, 'வைஷ்ணவ ஜனதோ' என்று தொடங்கும் பாடல். அப்பாடல் நரசிம்ம மேத்தா என்பவரால் எழுதப்பட்டது. அப்பாடலில் வைணவனின் இலக்கணங்கள் கூறப்படுகின்றன. அவை பின் வருமாறு:

'பிறருடைய துன்பங்களை உணர்கிறவனும், துன்பப்படுவோர்க்கு இரங்கி நன்மை புரிபவனும், உள்ளத்தில் சிறிதும் செருக்கற்றவனும் வைணவன்.

'உலகில் எல்லோர் முன்பும் பணிவு காட்டி, எவரையும் இகழாது இன்சொல் பேசி, உள்ளம் வாய் மெய் ஆகிய மூன்றினாலும் கவலையற்றிருப்பவனே வைணவன்.

'எவ்வுயிரும் தன்னுயிர்போல் எண்ணிப் பற்றை ஒழித்துப் பிற பெண்டிரைத் தாயென மதித்து, உள்ளத்தாற் பொய்யிலனாகிப் பிறன் பொருளை வெஃகாதவனாய் வாழ்பவன் வைணவன்.

'மாயையால் அசையாது உறுதிப்பாடு கொண்டு, இராமநாமத்தில் ஈடுபாடு மிக்கவனாய் வாழ்பவன் வைணவன்.

'பொய்யுரை, கயமை ஆகியவற்றினின்றும் விலகிப் பற்று, இன்ப விருப்பம், சினம் முதலியவற்றை அடக்கி ஆள்பவனே வைணவன்.

'இத்தகைய வைணவனைப் பெற்ற தாயை, நூறு முறை வணங்குவேன். அவனுடைய உடலில், எல்லாப் புண்ணியத் தலங்களும் அடக்கம். அவனை ஒருமுறை காண நேர்ந்தால், நமது எழுபத்தொரு தலை முறையும் கடைத்தேறும்.'

மேற்கூறிய பாடலை எடுத்துக்கூறி, 'இம்மாதிரியான வைண்வனவதற்கு நான் முயன்று கொண்டிருக்கிறேன்' என்று கூறுவார். அடிகள் கடைப்பிடித்தொழுகிய சமயத்திற்கு உயிரூட்டிய மற்றொரு குஜராத்திப் பாடல் குறிப்பிடத் தக்கது. அப்பாடல் பின் வருமாறு:

"ஒரு குவளைத் தண்ணீர் கொடுத்தவனுக்கு ஒரு வேளை விருந்தளிக்க வேண்டும்.

" அன்புடன் உன்னை வரவேற்பவனை ஆர்வத்தோடு வணங்க வேண்டும்.

"உனக்கு ஒரு காசு கொடுத்தவனுக்கு ஒரு பொன் திருப்பிக் கொடுக்க வேண்டும்.

"உன் உயிரைக் காத்து உதவிய அன்பனுக்குத் திரும்ப உன் உயிரை அளிக்க எப்போதும் ஆயத்தமாக இருக்க வேண்டும்.

"இப்படி யெல்லாம் நல்லோர் அறிவுரைகளை மதித்து நடப்பவன் பதின்மடங்கு நன்மை பெறுவான்.

"சான்றோர் எனப்படுவோரின் இலக்கணம் மேலே சொல்லப்பட்டவை மட்டுமன்று. அவர்கள்

மக்களினம் எல்லாம் ஒன்றென உணர்ந்தவர்கள்; ஆதலின் இன்னு செய்தார்க்கும் இனியவே செய்யும் பண்புடையவர்கள்.

"இன்னு செய்தார்க்கும் இனியவை செய்வதில் அவர்கள் பேரின்பம் அடைவார்கள்."

இப்பாடலின் இறுதி வரிகள் அடிகளின் இளமை உள்ளத்தில் பசுமரத்தாணி போல் பதிந்தன. மேற்கூறிய பாடல்களில் காணப்படும் கருத்துக்களே இவருடைய சமயம். இக்கருத்துக்கள் படிந்துள்ள சமயங்கள் யாவும் அடிகளின் சமயங்களே.

காந்தியடிகளின் முற்போக்குக் கருத்துக்களும், பொதுமை எண்ணங்களும், தீண்டாமைக் கொள்கையும், தீவிர இந்துக்களுக்குப் பிடிப்பதில்லை. இந்து சமயத்தைப் பாழ் செய்ய வந்தவர் என்று அடிகளைக் குறை கூறினர்; குற்றம் சாட்டினர். அவர்களுடைய குற்றச்சாட்டுக்கு வேறு பல காரணங்களும் உண்டு. இளமையிலிருந்து கோவில்களின் பால் அடிகள் கொண்ட வெறுப்புணர்ச்சியும் ஒரு காரணமாகும்.

"வைணவக் குடும்பத்தில் பிறந்தவனாதலின் பள்ளிப் பருவத்தில் நான் அடிக்கடி திருமால் கோவிலுக்குச் சென்று கொண்டிருந்தேன். ஆயினும் கோவில் என்னுள்ளத்தைக் கவரவில்லை. அங்குள்ள ஆடம்பரமும் பகட்டும் எனக்குப் பிடிக்கவில்லை. அங்கே பல தீச் செயல்கள் நடைபெறுகின்றனவென்றும் கேள்விப்பட்டேன்.

எனவே, கோவிலுக்குச் செல்வதில் எனக்கு விருப்பம் உண்டாகவில்லை. நான் கோவிலிலிருந்து பெறக்கூடியது எதுவுமிலதாயிற்று" என்று அடிகள் தம் வரலாற்று நூலில் குறிப்பிடுகிறார். இறைவழிபாட்டிற்கமைந்த புனிதமான கோவில்களில், ஆடல் மகளிர் இன்பச்சுவைப் பாடல்களைப் பாடி ஆடல் நிகழ்த்துவது அடிகளுக்குப் பிடிக்கவில்லை. அதனால் வெறுப்படைந்த அடிகள், "கோவில் வேசையரில்லமாகி விட்டது" என்று அஞ்சாமல் கூறினார். இக்கூற்று இந்து சமயவாதிகளுக்குப் பெரிதும் அதிர்ச்சியைக் கொடுத்தது எனலாம்.

1901 ஆம் ஆண்டில் காங்கிரசுக் கட்சியின் அகில இந்திய மாநாடு கல்கத்தாவில் கூடியது. காந்தியடிகளும் அம்மாநாட்டிற்குச் சென்றிருந்தார். மாநாடு முடிவுற்றதும் இராசகோட்டைக்குத் திரும்பும் வழியில் காசி, ஆக்ரா முதலிய பழம் பெரும் ஊர்களைப் பார்த்துவிட்டுச் சென்றார். காசியில் கண்ட காட்சிகள் அவருக்குப் பெரும் ஏமாற்றத்தை அளித்தன. புகழ்பெற்ற காசி விசுவநாதர் கோவிலுக்குச் செல்லும் வழி ஒரு குறுகலான சந்து. கோவிலைச் சுற்றியும் கோவிலுக்குள்ளேயும் அமைதி என்பதே கிடையாது. ஏமாற்றுக்காரர்களான கடைக்காரர்கள் மிட்டாய்களும், புதுமையான விளையாட்டுக் கருவிகளும் விற்றனர். கடைக்காரர்களும் கடைகளில் விலை பேசிய வழிப்போக்கர்களும் பேரிரைச்சலிட்டனர். எங்கும் ஈக்கள் மொய்த்துத் தூய்மையைக் கெடுத்தன. உள்ள ஒருமைப்பாட்டோடு இறைவனை வழிபட அது

ஏற்ற இடமாக இல்லை. கோவில் வாசலை அடைந்ததும் அழுகிப் போன பூக்குவியலின் நாற்றம் காந்தியடிகளுக்கு நல்வரவு கூறியது. கோவிலின் உட்புறம் நல்ல சலவைக் கல்லால் தளவரிசை போடப்பட்டு விளங்கியது. ஆனால் யாரோ ஒரு பக்தர் அந்தச் சலவைக் கற்களை நடுநடுவே உடைத்து ஆங்காங்கு வெள்ளி ரூபாய்களைப் பதித்திருந்தார். இந்த வெண்பொற்காசுகள் அழுக்குச் சேரும் தூய்மையற்ற பாண்டங்களாக விளங்கின.

கோவிலைச் சேர்ந்த 'ஞானவாவி' என்னும் குளத்திற்கு அடிகள் சென்றார். அதைச் சுற்றிலும் குப்பையும் கூளமும் குவிந்து கிடந்தன. காந்தியடிகளுக்கு இவையனைத்தும் மிக்க ஆத்திரத்தை அளித்தன. அந்த ஆத்திரத்தை வாவிக்கரையில் இருந்த பண்டாவிடம் காட்டினார். கோவில் குருக்களின் வேலையும், புரோகிதரின் வேலையும் சேர்த்துச் செய்கிறவர்களுக்குக் காசியில் 'பண்டாக்கள்' என்பது பெயர். பண்டாவிற்குக் காணிக்கை கொடுக்க அடிகளுக்கு மனம் வரவில்லை. இதற்கு அறிகுறியாக ஒரு காசு கொடுத்தார். ஆத்திரமடைந்த பண்டா, 'நீ நேரே நரகத்துக்குப் போவாய்' என்று சபித்ததோடு, அடிகள் அளித்த காசையும் வீசி எறிந்தார்.

காந்தியடிகள் இதனால் மனங் கலங்கவில்லை. 'என்னுடைய கதி எப்படி வேண்டுமானாலும் ஆகட்டும். குருவாகிய தாங்கள் இப்படிப் புன்மொழி பேசுதல், தங்கள் தகுதிக்கு ஏற்றதன்று. வேண்டுமென்றால் காசை எடுத்துக்கொள்ளுங்கள். இல்லாவிட்டால் அதுவும் போய்விடும்' என்றார்.

'தொலைந்து போ! உன் காசு யாருக்கு வேண்டும்?' என்று பண்டா மேலும் திட்டினார்.

'நமக்கு ஒரு காசு ஆதாயம்; பண்டாவுக்கு அது இழப்பு' என்று அடிகள் நினைத்துக்கொண்டு அதைக் கையிலெடுத்தார். ஆனால் பண்டாவா விடுகிறவர்? காந்தியடிகளைக் கூப்பிட்டு, 'நானும் உன்னைப்போல நடந்து கொள்ளலாமா? அந்தக் காசை ஏற்றுக் கொள்ளாவிட்டால் உனக்குப் பாவமல்லவோ வந்து சேரும்! கொடுத்து விட்டுப் போ!' என்றார். காந்தியடிகளும் அவ்விதமே கொடுத்து விட்டுத் திரும்பினார். இவற்றையெல்லாம் விரித்துக் கூறிவிட்டுக் காசி யாத்திரையைப் பற்றிக் கடைசியாக அடிகள் எழுதியிருப்பதாவது:

"ஆண்டவன் அருளில் யாருக்கேனும் ஐயமிருக்குமானால், அவர் இத்தகைய புண்ணியத் தலங்கட்குப் போய்ப் பார்ப்பாராக. இறைவன் தன் பெயரால் நடக்கும் எத்துணை அநீதிகளையும், போலி வேடங்களையும் பொறுத்துக் கொண்டிருக்கிறான்! நெடுங்காலத்துக்கு முன்பாகவே, 'மனிதன் விதைப்பதை அறுக்கிறான்' என்று ஆண்டவன் திருவாய் மலர்ந்திருக்கிறான். ஊழ் தப்பாமல் வந்து உறுத்தும். ஊழின் பயனைத் துய்க்காமல் தப்ப எவராலும் முடியாது. எனவே, இதில் ஆண்டவனும் பண்டாவும் தலையிடவேண்டிய தேவையே இல்லை. சட்டத்தை இயற்றிவிட்டு ஆண்டவன் அப்புறம் சென்று விட்டான் என்றே கூறலாம்."

மேற்கண்டவாறு காந்தியடிகள் எழுதி முப்பது ஆண்டுகள் ஆகிவிட்டன. இன்றும் காசி நகரமும்,

விசுவநாதர் ஆலயமும் அதே நிலையில் தாம் காட்சி யளிக்கின்றன.

காந்தியடிகள் கோவிலையும் உருவ வழிபாட்டையும்பற்றி மாறுபட்ட கொள்கையுடையவராக இருந்தாலும், அவை அடியோடு சமுதாயத்தை விட்டு ஒழிய வேண்டும் என்பது அவர் கருத்தன்று. ஒருமுறை அடிகள், 'விசுவபாரதி'யில் குருதேவர் இரவீந்திரநாத தாகூரிடமும், பிஷர் என்ற பாதிரியாரிடமும் உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது உருவ வழிபாட்டைப்பற்றியும் கோவில்களைப்பற்றியும் பேச்சு எழுந்தது. குருதேவர் அடிகளை நோக்கி, "காந்திஜி! இறைவன் கோவிலில் இல்லை. நெற்றி வியர்வை நிலத்தில் விழக் கல்லுடைக்கும் தொழிலாளியிடத்திலும், பாதை அமைக்கும் பாட்டாளியிடத்திலும் அவன் குடியிருக்கிறான். அவர்களோடு வெய்யிலில் வாடுகிறான்; மழையில் நனைகிறான். ஏழையின் ஆடையைப் போல், இறைவனின் ஆடையும் அழுக்குப் படிந்தது. இவ்வுண்மையை உணர்த்துவதற்காகத்தான் ஏசு மனிதனாகப் பிறந்து, மனிதனுக்குரிய இன்ப துன்பங்களை ஏற்றுச் சிலுவையில் மடிந்தார் என்பது பாதிரியாருக்கும் தெரியும். அத்தகைய ஆண்டவனைக் கல்லாக்க என் மனம் ஒருப்படவில்லை.

"உருவ வழிபாடும் கோவிலும் மனிதனுக்குத் தேவையில்லை என்று எண்ணுகிறேன். நீங்களும் என் கொள்கையை ஏற்றுக்கொள்வீர்கள் என்று நம்புகிறேன். இக்கொள்கை சரியானதென்றால் உல

கிலுள்ள சாதாரண மக்களுக்கும் இது பொருந்தும். உலகிலுள்ள கோவில்களில் மரம், வெண்கலம், கல், பளிங்கு ஆகியவற்ருல் அமைக்கப்பட்டிருக்கும் இறைவனின் சிலைகளையெல்லாம் பறித்துக் கொண்டு வந்து குவித்து, இறுதியில் அவைகளைக் கடலில் கொட்டிவிட வேண்டுமென்பது என் விருப்பம்'' என்று கூறினுர்.

குருதேவரின் பேச்சைக் கேட்ட எல்லோரும் வாயடைத்து நின்றனர். ஆனுல் காந்தியடிகள் என்ன கூறினுர் தெரியுமா ?

'குருதேவரே! கோவிலில் இருக்கும் இறைவனின் சிலை முடவனின் கையிலுள்ள ஊன்றுகோல் போன்றது. அவனிடத்திலுள்ள ஊன்றுகோலைப் பறிப்பதற்கு முன் அவன் முடத்தன்மையை நீக்க வேண்டும். அதை ஒரேயடியாக நீக்க முடியாது. சிறிது சிறிதாகத்தான் நீக்க முடியும். முதலில் நாம் செய்யவேண்டிய வேலை அதுதான்' என்று காந்தியடிகள் கூறினுர்.

மக்கள்பால் படிந்துள்ள அறியாமையை அவர் முடத்தன்மைக்கு ஒப்பிடுகிருர். அவ்வறியாமை நீங்கினுல் தான், உலகில் வாழும் எல்லா உயிர்களிடத்தும் இறைவனைக் காணும் உணர்வுபெற முடியும். முடவனுக்கு ஊன்றுகோல் உதவுவது போல் கோவிலில் உள்ள உருவச்சிலை இறைவனேடு மக்கள் சிறிதளவாவது தொடர்பு கொள்ள உதவுகிறது. அவ்வூன்றுகோலையும் பிடுங்கிக்

கொண்டால், மக்களுக்கு இறைவன்பாலுள்ள தொடர்பே அற்றுவிடும். ஆகையினால் அறியாமை என்னும் மூடம் முதலில் நீங்க வேண்டும் என்று அடிகள் கூறுகிறார்.

இவ்விடத்தில் காந்தியத்தை நன்குணர்ந்த இரண்டு கவிஞர்களின் பாடல்களைக் குறிப்பிட விரும்புகிறேன்.

அல்லா என்பார் சிலபேர்கள்
அரனரி என்பார் சிலபேர்கள்
சொல்லால் விளங்கா நிர்வாணம்
என்றும் சிலபேர் சொல்வார்கள்
எல்லாம் இப்படிப் பலபேசும்
ஏதோ ஒருபொருள் இருக்குமன்றோ ?
அந்தப் பொருளை நாம் நினைந்து
அனைவரும் ஒன்றாய்க் குல்விடுவோம்.

* * *

தெய்வம் பலபல சொல்லிப்—பகைத்
தீயை வளர்ப்பவர் மூடர்;
உய்வ தனைத்திலும் ஒன்றாய்—எங்கும்
ஓர்பொரு ளானது தெய்வம்
தீயினைக் கும்பிடும் பார்ப்பார்—நித்தம்
திக்கை வணங்கும் துருக்கர்
கோயிற் சிலுவையின் முன்னே—நின்று
கும்பிடும் ஏசு மதத்தார்

**யாரும் பணிந்திடும் தெய்வம்—பொருள்**
**யாவினும் நின்றிடும் தெய்வம்**
**பாருக்குள்ளே தெய்வம் ஒன்று—இதில்**
**பற்பல சண்டைகள் வேண்டாம்.**

இப்பாடல்கள் முறையே நாமக்கல் இராம லிங்கம் பிள்ளையவர்களாலும், தேசியக் கவி சுப்பிர மணிய பாரதியாராலும் பாடப்பட்டவை; இப் பாடல்களில் கூறப்படும் கடவுட்கொள்கையே காந்தியடிகளின் கடவுட் கொள்கை. காந்தியடி களுக்கு அரனும் ஒன்றுதான் அல்லாவும் ஒன்று தான்; பரமண்டலத்திலிருக்கும் பரம பிதாவும் பரந்தாமனும் ஒன்றே. குறளும் குரானும், கீதையும் கிருத்தவ வேதமும் அவர் சமய நூல்களே. இந்துக் களும், இசுலாமியர்களும், கிருத்தவர்களும் அவர் உடன் பிறந்தவர்களே. இராமனுக்கும் இரகீமுக் கும் அவர் வேறுபாடு கண்டறியார். 'ஈஸ்வர அல்லா தேரே நாம்' (ஈசுவரன் அல்லா என்பதெல் லாம் உம் பெயரே) என்பது அவரது வழிபாட்டுப் பாடல். அவர் தென்னுப்பிரிக்காவில் வாழ்ந்தபோது மாதாகோவிலுக்கும், மசூதிக்கும் செல்வார்.

காந்தியடிகள் தம்மை எப்பொழுதும் அரசியல் வாதி என்று கூறிக்கொள்ளமாட்டார்; சமயவாதி என்றே குறிப்பிடுவார் ; தம் வாழ்வில் நடத்திய அரசியல் போராட்டங்களை யெல்லாம் சமயத் தொண்டாகவே அவர் குறிப்பிடுவார் ; சத்தியாக் கிரகத்தை 'வேள்வி' என்பார்; 'நம் நாட்டின் சமயத் தைப்பற்றி நன்குணர்ந்து கொள்ளாதவன், மக் களுக்கு உண்மையான அரசியற் பணியைச் செய்ய

முடியாது' என்று அடிக்கடி கூறுவார்; 'கிலாபத்' இயக்கத்தின் சமயப்போராட்டத்தை அரசியலோடு இணைத்துக்கொண்டார். அரசியலைச் சமயக் கண் கொண்டு நோக்கும் அடிகளின் கொள்கை, பல அரசியல் வாதிகளுக்குப் பிடிக்கவில்லை. பண்டித நேரு கூட, 'காந்தியடிகளின் இக்கொள்கை எனக்குப் பிடிக்கவில்லை; புரியவுமில்லை' என்று பல இடங்களில் கூறியிருக்கிருர். அரசியல் காரணங்களுக்கு மட்டுமல்லாமல், இயற்கையின் கொடுமைகளுக்குக் கூடச் சமயத்தையே அடிகள் சான்று காட்டிப் பேசுவார். ஒருமுறை வட இந்தியாவில் பெரும் நில நடுக்கம் தோன்றிப் பல்லாயிரக்கணக்கான மக்களின் உயிரைக் கொள்ளை கொண்டது. அதுபோழ்து, 'கோடிக்கணக்கான இந்து சகோதரர்களைத் தீண்டாதவர்களாகச் சேரியில் நாம் ஒதுக்கி வைத்துள்ள பாவத்திற்கு, இறைவன் அளித்த தண்டனையே இந்நில நடுக்கம்' என்று அடிகள் கூறினர். இக்கூற்று ஏற்றுக்கொள்ளத் தக்கதல்ல என்று நேரு எண்ணினர்; எண்ணியதோடு அமையாமல் பத்திரிகைகளிலும் எழுதினர்.

ஆனல் காலம் செல்லச் செல்ல அடிகளின் கொள்கை இந்திய அரசியல் வாதிகளுக்குப் பழகிப் போய்விட்டது. இது சிறந்த ஒரு கொள்கையாகவும் பட்டது. காந்தியடிகளின் சமயக் கொள்கைகள் வெறும் ஆன்மிகத்தின் அடிப்படையில் மட்டும் அமையாமல், சமூகம், அரசியல், பொருளியல் ஆகிய பலவற்றின் அடிப்படையில் அமைந்தவை. அத்தகைய அடிப்படைகளை

அமைத்துக்கொடுத்தவை, பல அரிய நூல்களாகும். ஆன்மிக அடிப்படையை அமைத்துக் கொடுத்த நூல்கள் கீதையும், விவிலியமும் ஆகும். அடிகளின் அரசியல் பொருளியல் சமூகவியல் ஆகிய அடிப் படைகளை அமைத்துக் கொடுத்தவைகள், அன்று கிங்ஸ் போர்டு என்பார் எழுதிய 'நேரிய வழி' (The Perfect Way) என்ற நூலும், உருசியப் பேரறிஞரான தால்ஸ்தாய் எழுதிய 'ஆண்டவன் அரசு உனக்குள்ளே' என்ற நூலும், ஆங்கிலப் பேரறிஞரான இரஸ்கின் எழுதிய 'கடைசி மனி தனின் நல்வாழ்வு' (Unto The Last) என்ற நூலும் ஆகும். தால்ஸ்தாயை அடிகள் தம்முடைய குரு நாதராகப் போற்றுவார். இரஸ்கினுடைய 'கடைசி மனிதனின் நல்வாழ்வு' தம்முடைய வாழ்வில் ஒரு திருப்பு மைய (Turning point) மாக அமைந்தது என்று கூறுகிறார். அந்நூலில் காணப்படும் அரிய உண்மைகள் மூன்று. அவையாவன :

1. தனிப்பட்ட மனிதனின் நன்மை, பொது மக்களின் நன்மையில் அடங்கியுள்ளது.
2. வழக்கறிஞன் உழைப்பும், நாவிதனுடைய உழைப்பும் ஒரே பெறுமான முள்ளவையே. ஏனெனில் அனைவருக்கும் தங்கள் உழைப் பினால் சம்பாதிக்கும் உரிமை சமமாக உண்டு.
3. உடலை உழைத்து வாழும் வாழ்வே— அதாவது குடியானவன் அல்லது தொழி லாளியின் வாழ்வே—மேன்மையான வாழ் வாகும்.

மேற்கூறிய கொள்கைகளே காந்தியடிகளின் வாழ்க்கையில் ஒளி வீசின. இக்கொள்கைகள் மனிதத் தன்மையின் எதிரொலிகள். காந்தியடிகளின் சமயத்திற்குச் சரியான பெயர் கொடுக்க வேண்டுமானால் 'மனிதத் தன்மை' என்று பெயர் கொடுக்கலாம். மேற்கூறிய கொள்கைகளை யெல்லாம் வள்ளுவப் பெருமான் பல இடங்களில் வற்புறுத்திச் சொல்கிறார். அக்குறட்பாக்கள் பின் வருமாறு :

அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.

அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று.

பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்.

தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

ஒப்புரவி னல்வருங் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து.

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்.

இனிச் சமயத்தைப்பற்றிக் காந்தியடிகள் கூறியுள்ள பொன்மொழிகள் சிலவற்றைக் காண்போம்:

'சமயம் சமயம் என்று எல்லாவற்றையும் நான் ஏற்றுக் கொள்ளமாட்டேன். சமயத்தின் பெயரால் செய்யப்படும் கொடுமைகளை ஏலேன். பண்டை நூல்கள் தெய்விகமானவைகளே. ஆனாலும் அவைகளிலுள்ள பொருள்கள் என்னறிவிற்குப் பொருந்தியனவா யிருத்தல் வேண்டும். இல்லையேல், நூல்களின் கடவுட்டன்மையையும் நான் மறுப்பேன்.'

'சமயமென்றால் எது சமயம்? கரவும், மூட பக்தியும், கண்மூடி வழக்கமுங் கொண்டது சமயமன்று.'

'உயிரை, சம்பத்தை, வாணிகத்தை, குடும்பத்தை, உடலை எதையும் பொருளாக மதித்தல் கூடாது. சத்தியாக்கிரகம் மனித உரிமையைப் பற்றிய போர். ஆதலால் இது சமயப் போராகிறது. மனச்சான்றுரிமை குறித்துப் போராடுவது சமயப் போராகவே இருத்தல் வேண்டும்.'

'எல்லா உலகங்கட்கும் பொதுவாயிருப்பது ஒன்று. அஃது எங்கும் நீக்கமற நிறைந்தது. அது சத்தியப் பொருள். அதை நேராகக் காண விரும்பும் ஒருவர் என் செய்தல் வேண்டும்? அவன் படைப்பில் இழிந்த ஒன்றையும் தன்னைப்போல் நேசித்தல் வேண்டும். சத்தியத்தில் எனக்கு அளவிலா அன்பு உண்டு. அவ்வன்பு என்னை அரசி

யலிலுஞ் செலுத்தியது. இதனால் அரசியலுக்கும் சமயத்துக்கும் உள்ள தொடர்பு எனக்கு விளங்கியது. இரண்டிற்கும் தொடர்பில்லை என்று சொல்பவன், சமய நுட்பம் இன்னதென்று தெரியாதவன் என்று தயங்காமல் கூறுவேன்.'

'சமயமின்றி அரசியலில்லை. சமயத்துக்கு அரசியலும் ஒரு துணை. சமயமற்ற அரசியல், கூற்றுவன் போன்றது.'

'யான் அரசியல் வாதியா? சமயவாதியா? யான் அரசியல் நாடகம் நடிக்கும் சமயவாதி.'

'சமயம் ஒரு முதல்; நாட்டுப்பற்று ஒரு சினை; சமயத்துக்கு நாட்டுப்பற்று கீழ்ப்பட்டது.'



# 4. சாதி

'எனக்குத் தோட்டித் தொழிலில் விருப்புண்டு. எனது ஆசிரமத்தில் பதினெட்டு வயதுப் பார்ப்பனச் சிறுவன், ஆசிரமக் குப்பை கூட்டும் வேலையைக் கற்க வேண்டித்தான் தோட்டி வேலை செய்கிருன். அவ்விளைஞன் சீர்திருத்தக் காரனல்லன். அவன் வைதிகத்தில் பிறந்து வளர்ந்தவன். அவன் நாடோறும் கீதை பாராயணஞ் செய்பவன்; சந்தியாவந்தனம் முதலியவற்றை முறையே நிகழ்த்துபவன். அவனது வடமொழி உச்சரிப்பு என்னுடையதினும் நன்ருயிருக்கிறது. இறை வழிபாட்டின் போது அவன் பாடும் இனிய இசை, உள்ளத்தை உருக்கி அன்பு வண்ணமாக்குகிறது. குப்பை கூட்டுந் தொழில் பயில்வது, கடமை நிறைவேற்றத்தில் ஒன்றென்றும், ஆசிரமக் குப்பைக்காரர் செவ்வனே வேலை செய்ய வேண்டுமானுல், தான் அத்தொழிலில் வல்லவனுயிருந்து வழிகாட்டியாய் அமைதல் வேண்டுமென்றும் அவன் உணர்கிருன்' என்று கடமையின் சிறப்பைக் காந்தியடிகள் விளக்குகிருர். இச்சொற்களிலிருந்து, 'தொழில் கடமையின் அடிப்படையில் அமையவேண்டுமேயன்றிச் சாதியின் அடிப்படையில் அமைவது கூடாது' என்ற சிறந்த உண்மையை நாம் உணரலாம்.

நம் இந்து சமுதாயத்தில் 'வருணாச்சிரமக் கொள்கை' என்பதொன்று வழங்கி வருவதை நாம் அறிவோம். அக்கொள்கை சிறந்த அடிப்படையில் தோன்றியது. ஆனால் பிற்காலத்தில் அதன் பயன் தீதாக முடிந்தது. முதன் முதலில் ஒவ்வொருவரும் செய்த தொழிற் சிறப்பின் வகையால், வருணப் பிரிவுகள் ஏற்பட்டன. ஆனால் அதே வருணப் பிரிவுகள் பிறப்பின் வகையால் வேரூன்றிவிட்டன. காந்தியடிகள் வருணாச்சிரமக் கொள்கையில் நம்பிக்கையுடையவர். ஆனால் அவர் அக்கொள்கைக்குப் பொருள் கொண்டவிதமும், கடைப்பிடித்த முறையும் வேறு. 'ஒவ்வொருவனும் தாழ்ந்தவனாகவே (சூத்திரன்) பிறக்கிறான். ஒவ்வொருவர் உள்ளத்திலும் தவ விதை உண்டு. எவன் முயற்சியால் அதை முளைக்குமாறு செய்கிறானோ அவன் தாழ்ந்த இனத்தில் பிறந்தவனாயினும் மேலானவன். உயர்குலத்தில் பிறந்தும் தவத்தைக் கைவிடுவானாயின், அவன் தாழ்ந்தோனாவான். கிடைத்த அளவு உள்ள நிறைகொள்ளல், பிறர் குற்றம் மன்னிக்கும் நீர்மை, மன அடக்கம், உண்மையில் நாட்டம், வித்தை விருப்பம், வாய்மை, சினமின்மை, தூய்மை ஆகிய பண்புகள் அறத்தின் குறிகளாம். இப்பண்புகளை எவர் செவ்வனே பயின்று முறையாகச் செயலில் கொணர்கிறாரோ அவர் எவராயினும் மேலான நிலையடைவர்' என்பது அடிகளின் அசைக்க முடியாத நம்பிக்கை.

இக்கொள்கைகள் வள்ளுவப் பெருமான் அருளிய 'மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்

பான் பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்' என்ற குற ளுக்கு விளக்கமாக அமைந்திருக்கின்றன. ஆங் கிலப் பேரறிஞரான இரஸ்கின் எழுதியுள்ள 'கடைசி மனிதனின் நல்வாழ்வு' என்ற நூல், காந்தியடி களின் வாழ்க்கையில் ஒரு திருப்புமையமாக அமைந்தது என்று முதலில் குறிப்பிட்டேனல்லவா? அந் நூலில் வலியுறுத்தப்பட்ட கொள்கைகளில் முதன்மையானது, 'வழக்கறிஞன் உழைப்பும், நாவிதனுடைய உழைப்பும் ஒரே பெறுமான முள் ளவை' என்பதுதான். அக்கொள்கை அடிகளின் உள்ளத்தில் ஆழப்பதிந்து விட்டது எனலாம். உலகில் பெரும்பாலோர் பேச்சளவில் *சீர்திருத்த* வாதிகளாக இருப்பர். *சீர்திருத்தக்* கொள்கைகளை நடைமுறை வாழ்க்கையில் கடைப்பிடிப்போரை விரல்விட்டு எண்ணிவிடலாம். அடிகள் மேற் கொண்ட *சீர்திருத்தம்* நடைமுறைச் *சீர்திருத்தம்.* எப்பொழுதும் ஓரியக்கத்தின் தலைவன், தான் வகுத்த கொள்கைகளுக்கு முன்மாதிரியாக விளங்க வேண்டும்; தன்னல மறுப்புள்ளவனாக இருக்க வேண்டும். அப்போதுதான் அவனைப் பின்பற்று பவர்களும் கொள்கையில் உறுதியும், நம்பிக்கையும் கொண்டவர்களாக விளங்குவார்கள்.

'வழக்கறிஞன் தொழிலும் நாவிதன் தொழிலும் ஒரே பெறுமான முள்ளவை' என்று காந்தியடிகள் வாயளவில் சொன்னதோடு அமையவில்லை. தாமே நாவிதன் செய்யும் தொழிலைச் செய்து காட்டினார். தென்னாப்பிரிக்காவில் அடிகள் வாழ்ந்தபோது, ஒரு நாள் முடிவெட்டிக் கொள்வதற்காகச் சென்றார். முடிவெட்டும் நிலையத்தில் பணி செய்துகொண்

டிருந்த வெள்ளைக்கார நாவிதன், 'கருப்பனுகிய உனக்கு முடிவெட்ட முடியாது' என்றுகூறி மறுத்து விட்டான். உடனே, தாமே ஏன் முடி வெட்டிக் கொள்ளக்கூடாது ? என்ற எண்ணம் அடிகளுக்கு ஏற்பட்டது. அதிலிருந்து தாமே முடிவெட்டிக் கொண்டதோடு, தம் குழந்தைகளுக்கும் வெட்டி விட்டார். முதலில் அடிகளின் இச்செயலைக் கண்டு நண்பர்கள் நகையாடினர். ஒருநாள் வழக்கு மன் றத்தில் காந்தியடிகள் அமர்ந்திருந்தபோது, அவ ருடைய நண்பர்கள் 'என்ன காந்தி! உமது மயி ருக்கு என்ன ஆபத்து வந்தது ? எலி கடித்து விட்டதா?' என்று சிரித்துக்கொண்டே கேட்டனர். ஆனுல் அடிகள் அதைப் பொருட்படுத்தவில்லை. கொஞ்சநாளைக்குள் தலைமயிரைத் தாமே வெட்டிக் கொள்வதிலும் நல்ல திறமை பெற்ருர்.

ஒரு சமயம் திருவாளர் கோகலே தென்னுப் பிரிக்காவில் சுற்றுப்பயணம் செய்தார். கோகலே யிடம், அவருடைய குருவான இரானடே அளித்த மேல் துண்டு ஒன்று இருந்தது. அது சரிகைக்கரை யிட்ட விலைமதிப்புள்ள துண்டு. சிறப்பான நிகழ்ச்சி களின் போது மட்டும், கோகலே அத்துண்டை அணிவது வழக்கம். தென்னுப்பிரிக்காவில் ஜோகன்னஸ்பர்க் இந்தியர்கள் கோகலேவுக்கு ஒரு விருந்து நடத்தினர். அதற்கு மேற்படி துண்டை அணிந்து கொண்டு போக கோகலே விரும்பினுர். ஆனுல் அத்துண்டு மடிப்புக் கலைந்து போயிருந்தது. இது குறித்துக் கோகலே அடைந்த கவலையைக் காந்தியடிகள் தெரிந்து கொண்டு, தம்

முடைய கைத்திறமையை அத்துண்டின்பால் காட்டுவதாகச் சொன்னார்.

'அரசியல் வேலைகளுக்கும், வழக்கறிஞர் தொழிலுக்கும் உம்மை நம்பலாம். ஆனால் சலவைத் தொழிலுக்கு உம்மை எப்படி நம்பமுடியும்? என்னுடைய மேல்துண்டைப் பாழ்செய்து விட்டால் என்ன செய்வேன்?' என்று கூறினார் கோகலே.

காந்தியடிகள் மேலும் பிடிவாதம் பிடித்து, அத்துண்டை வாங்கிக் கொண்டார். சலவைத் தொழிலாளியைவிட நன்முறையில் அவ்வேலையைச் செய்திருப்பதாகக் கோகலே பாராட்டு வழங்கினார்.

தோட்டி வேலை அடிகளுக்கு மிகவும் பழக்கப்பட்ட ஒன்று. தென்னாப்பிரிக்காவில் போனிக்ஸ் பண்ணையிலும் தால்ஸ்தாய் பண்ணையிலும் அடிகள் வாழ்ந்தபோது, கக்கூசைச் சுத்தம் செய்யும் முறை இவருக்கும் உண்டு. 1944ஆம் ஆண்டு கல்கத்தாவில் இந்து முஸ்லிம் கலகம் மிகுதியாக இருந்தது. அக்குழப்பத்தை அடக்குவதற்காக அடிகள் அங்குச் சென்றார்; முஸ்லிம்கள் மிகுதியாக வாழும் பகுதியில் 'ஹைதரி மாளிகை' (Hydari Mansion) என்ற இடத்தில் தங்கியிருந்தார். ஒரு நாள் மாலை, அருகிலிருந்த ஒரு சிறிய சந்தின் வழியாகச் செல்லவேண்டியிருந்தது. அச்சந்தில் வாழ்ந்த மக்கள் கண்ட இடங்களில் மலங்கழித்துப் பாதையின் தூய்மையைக் கெடுத்திருந்தார்கள். அதைக் கண்ட அடிகள் அருகிலிருந்த நண்பர்களிடம் ஒரு கூடையும் மண்வெட்டியும் கொண்டு வருமாறு

சொன்னார். கொண்டு வந்ததும், தாமே அங்குக் கிடந்த மலத்தை அப்புறப்படுத்தினார். அருகி லிருந்த தொண்டர்கள் அவ்வேலையைத் தாங்கள் செய்வதாகக் கூறித் தடுத்தார்கள். அடிகள் அதற்கு உடன்படவில்லை. மாளிகைக்குத் திரும் பியதும், அவருடைய பேர்த்தியான மனுகாந்தி, "பாபு! மலம் வாரும் வேலையை நீங்களே செய்ய வேண்டுமா? அருகிலிருந்த என்னைச் செய்யச் சொல்லி இருக்கலாமல்லவா?" என்று வருத்தத் துடன் கேட்டாள்.

அதற்கு அடிகள், 'நீ அவ்வேலையைச் செய்வ தால் மிகுந்த பயன் விளையாது. நான் செய்வது தான் சரி. அப்போதுதான் அங்கு வாழும் மக்கள் திருந்துவார்கள்' என்று விடையளித்தார். அன்றி லிருந்து அச்சந்தில் வாழ்ந்த மக்கள் தெருவில் மலங் கழிப்பதில்லை.

மேற்கூறிய செயல்களிலிருந்து அடிகளின் சீர் திருத்த உள்ளம் புலனாகும். அடிகள் வாய்ச் சொல் வீரரல்லர்; செயல் வீரர்.

காந்தியடிகளின் கொள்கைகளில் தலையாயது தீண்டாமை ஒழிப்புக் கொள்கை. நாட்டில் பல கோடி மக்களைத் தீண்டத் தகாதவர்களென்று சேரி யில் ஒதுக்கி வைப்பதைப் பெரிய பாவமென்று அவர் கருதினார். அப்பாவத்திற்குரிய தண்டனை தான் பெரும் ~~பூதமாக~~ உருவெடுத்து ஆயிரக் கணக்கான இந்தியர்களின் உயிரைக் குடித்தது

என்று நம்பினார். தாழ்த்தப்பட்டவர்களைப் பறையர் என்றோ, பள்ளர் என்றோ அடிகள் ஒருபோதும் கூறமாட்டார்; அவ்வேழை மக்களை ஆண்டவன் பெயரால் 'அரிஜனங்கள்' என்றும், 'தரித்திர நாராயணர்கள்' என்றுமே குறிப்பிடுவார்; தீண்டாமைக் கொடுமை இந்து சமுதாயத்தின் புரையோடிய புண் என்று அவர் கருதினார். அப்புண் ஆறும் வரை, இந்து சமுதாயத்திற்கு விடுதலை இல்லை என்றார்; சமுதாய விடுதலை இல்லாவிட்டால் நாட்டு விடுதலையும் கிட்டாது என்று விளக்கிக் கூறினார். "அரிஜன நலன் வேண்டுமா? சுயராச்சியம் வேண்டுமா? என்று என்னைக் கேட்டால் அரிஜன நலனே முன்னதாக வேண்டும்" என்று கூறுவேன் என்கிறார் அடிகள்.

காந்தியடிகள் சாதிக் கொடுமையை அறவே வெறுத்ததோடு, தம் மனைவியையும் தம் கொள்கைக்கு இணங்கி நடக்குமாறு செய்தார்.

காந்தியடிகள் சாதிக்கொடுமைகளை எதிர்த்துப் போராடுவதில் மிகவும் பிடிவாதக்காரர். தென்னாப்பிரிக்கா உரிமைப் போராட்டத்தில் ஈடுபட்டு, அவ்வரசாங்கத்தாரால் நாடு கடத்தப்பட்ட சில இந்திய நண்பர்கள் சாந்திநிகேதனத்தில் தங்கியிருந்தனர். அவர்கள் தங்களுடைய மனைவி மக்களையும், சொத்துக்களையும் விட்டுப் பிரிந்து வந்தவர்கள். அவர்கள் பொருட்டு அடிகள் ஓர் ஆசிரமம் ஏற்படுத்த விரும்பினார். முதன் முதலில் 'கோச்ராப்'பிலிருந்த ஒரு வாடகைக் கட்டடத்தில் ஆசிரமம் தொடங்கப்பட்டது. அப்போது அவ்வாசிரமத்தின் உறுப்பினர்கள் இருபத்தைந்து பேர். அவர்

களில் பெண்களும் இருந்தனர். அவ்விருபத்தைந்து உறுப்பினர்களில் பதின்மூன்று பேர் தமிழர்கள். எல்லாரும் பொதுவான சமையலறையில் சாப்பிட்டு, ஒரே குடும்பம்போல் வாழ்க்கை நடத்தினர். அரிஜனக் குடும்பம் ஒன்றும் அவ்வாசிரமத்தில் இடம்பெற்றது.

ஒரு சிற்றூரில் கூட்டமொன்று நடத்த ஏற்பாடாகி இருந்தது. காந்தியடிகள் அக்கூட்டத்தில் பேசவிருந்தார். காந்தியடிகளின் பேச்சைக் கேட்கவும், அவரைக் காணவும் மக்கள் திரளாகக் கூடியிருந்தனர். சேரியிலிருந்து தாழ்த்தப்பட்ட மக்களும் வந்திருந்தனர். கூட்டத்தின் நிர்வாகிகள், அவர்களைக் கண்டதும், 'உங்களை இங்கு யார் அழைத்தது? பள்ளருக்கும், பறையருக்கும் இங்கென்ன வேலை? மரியாதையாக இவ்விடத்தை விட்டுச் சென்று விடுங்கள்' என்று விரட்டினர். பாவம், அவர்கள் மீது நாற்புறமும் வசைமாரி பொழியப்பட்டது. அவ்வேழை மக்களுக்காகப் பரிந்து பேசுவோர் யாருமில்லை.

"பெரியோர்களே! எங்களுக்கும் இடந்தாருங்கள்.காந்தியடிகள் எங்களுக்கும் சொந்தம் தானே!" என்று வேண்டிக்கொண்டனர் அவ்வேழை மக்கள். கடைசியில் நிர்வாகிகள் ஓரளவு சமாதானமடைந்து அச்சேரி வாழ் மக்களுக்குத் தொலைவில் இடம் கொடுத்தனர்.

குறிப்பிட்ட நேரத்தில் காந்தியடிகள் கூட்டத்துக்கு வந்தார்; நேரே மேடைக்குப் போய்ப் பேசுவதற்காக நின்றார்; கூட்டம் முழுவதையும் ஒருமுறை

பார்வையிட்டார். தொலைவில் ஒதுங்கிஅமர்ந்திருந்த அரிஜனக் கூட்டம், அடிகளின் கூரிய பார்வையில் பட்டது. கூட்டத்தின் நிர்வாகிகளை அழைத்து, 'அவர்கள் ஏன் ஒதுங்கி உட்கார்ந்திருக்கிறார்கள்?' என்று கேட்டார்.

'அவர்கள் சேரிவாழ் மக்கள்; தீண்டத் தகாதவர்; பறையர்; பள்ளர். அதனால்தான் அவர்களை ஒதுக்கி வைத்திருக்கிறோம்' என்று நிர்வாகிகள் விடையளித்தனர்.

'அவர்களும் மற்றவர்களுடன் சேர்ந்து உட்காருவதில் என்ன தவறு இருக்கிறது?' என்று அடிகள் கேட்டார். நிர்வாகிகள் மௌனம் சாதித்தனர்.

உடனே காந்தியடிகள் மேடையை விட்டு இறங்கி அரிஜனங்கள் அமர்ந்திருந்த இடத்திற்குச் சென்றார்; அங்கிருந்தே பேசினார். அரிஜனங்களின் மகிழ்ச்சிக்கு எல்லை இல்லை. 'காந்தியடிகள் வாழ்க' என்ற வாழ்த்தொலி விண்ணைப் பிளந்தது.

ஆங்கிலேயர் பிரித்தாளும் சூழ்ச்சியில் வல்லவர்கள். சட்டசபைத் தேர்தலில் போட்டியிட, அரிஜனங்களுக்கென்று தனித் தொகுதிகளை அமைத்தனர். இதனைக் கண்ட காந்தியடிகள் உள்ளம் வருந்தினார். 'சமுதாயத்தில்தான் அரிஜனங்களை ஒதுக்கிவைக்கிறோம். அரசியலிலுமா ஒதுக்கி வைக்கவேண்டும்?' என்று கேட்டார். அதற்காக உண்ணாவிரதமும் மேற்கொண்டார். திருவாங்கூர் நாட்டில் 'வைக்கம்' என்ற ஊரில் அரிஜனங்களைக் கோவிலுக்குள் விடவேண்டுமென்பதற்காகவும், தெருவில் உரிமையுடன் நடக்க விடவேண்டு

மென்பதற்காகவும் ஒரு போராட்டமும் நடத்தினர். சாதிக் கொடுமைகளை ஒழிப்பதற்காக அடிகள் மேற்கொண்ட முயற்சிகள் அளவிலடங்கா.

அடிகள் ஒருமுறை வழக்கு மன்றத்தில் தம் மைப்பற்றிய விவரங்களைக் குறிப்பிட வேண்டி வந்த போது, 'உழவன்' என்றே குறிப்பிட்டார். உழவன் நாட்டுக்கு உயிர்நாடி போன்றவன். உழவுத்தொழில் உலகின் இதயம். உழவு நடை பெறவில்லை யென்றால் உலகம் இயங்க முடியாது. இப்பேருண்மையை உணர்ந்தே அடிகள் உழவைப் போற்றினர். உழவர் வாழும் கிராமங்கள் மறு மலர்ச்சி யடைவதற்காகத் தனி இயக்கமே தொடங்கி நடத்தினர்.

சுழன்றும் ஏர்ப் பின்ன துலகம் அதனால்
உழந்தும் உழவே தலை.

உழுவார் உலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை எல்லாம் பொறுத்து.

பலகுடை நீழலும் தங்குடைக் கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்.

என்ற குறட்பாக்களால் வள்ளுவரும் உழவைச் சிறப்பித்துப் பேசுகிறார்.

ஆனால் இவ்வுழவர்கள் சமுதாயத்தில் எவ் வாறு மதிக்கப்படுகிறார்கள்? ஏழைகளாகவும், நாகரிகமற்றவர்களாகவும், தாழ்த்தப்பட்டவர்களா கவும் கருதப்படுகின்றனர். 'பட்டிக்காட்டான்' என்று இழித்துப் பேசப்படுகிறான் உழவன். ஆனால் 'உழவன்' என்ற அடிப்படையின் மேல்தான் இந்திய சமுதாயம் என்னும் பெருமாளிகை நிறுவப்பட்டுள்

ளது. எனவே, உழவனின் இன்றியமையாமையை யும் சிறப்பையும் புலப்படுத்தவே அடிகள் தாமும் உழவரானார். அடிகள் கடைப்பிடித்த இக்கொள்கை களின் விளக்கங்களாகவே வள்ளுவரின் கீழ்க் கண்ட குறட்பாக்கள் திகழ்கின்றன :

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்.

'காந்தியடிகள் தீண்டாமையைப் பற்றியும், சாதிக் கொடுமையைப் பற்றியும் கூறிய சில அறி வுரைகளைக் காண்போம் :

'தீண்டாமை என்பது இந்து சமயத்தில் படிந் துள்ள ஒரு கறை.'

* * *

'அரிஜனங்களைச் சாதி இந்துக்கள் நடத்தும் முறை சமயநெறிக்கும், அருள்நெறிக்கும் மாறு பட்டதாகும்.

* * *

'தீண்டாமை இந்து சமயத்தின்பாற் பட்ட தென்று நான் நம்பவில்லை. அஃது அச்சமயத்தின் பாற்பட்ட தென்று சொல்லப்படின், அந்த இந்து சமயம் எனக்குரியதாகாது.

* * *

தீண்டாமை இந்து சமயத்தின் உயிர்நாடி என என் முன்னிலையில் உறுதிப்படுத்தப் படுமேல் இந்து சமயத்துக்கு நேர்மாறாகக் கிளர்ச்சி செய்ய நான் புறப்படுவேன்.

∘∘

# 5. அருளறம்

ஆபிரகாம் லிங்கனைப்பற்றி எண்ணும் போது 'மனிதத்தன்மை' நம் நினைவில் தோன்றும். கார்ல் மார்க்சைப்பற்றி எண்ணும் போது 'பொருளியற் கொள்கை' நம் உள்ளத்தில் தோன்றும். பிளாரன்ஸ் நைட்டிங்கேலைப் பற்றி எண்ணும்போது 'தொண்டு' நம் உள்ளத்தில் பளிச்சிடும். அண்ணல் காந்தியடிகளைப் பற்றி எண்ணும் போது உலக மக்கள் உள்ளத்தில் தோன்றுவது என்ன என்று கேட்டால், 'அருளறம்' (அஹிம்சை) என்று தயங்காமல் கூறிவிடலாம். அடிகள் உலகிற்கு வழங்கிய அரும் பொருள் அருளறம்தான். அக்கொள்கை தொன்று தொட்டு ஏட்டளவிலும் பேச்சளவிலுமே நின்று நிலவி வந்தது. ஆனால் அக்கொள்கையை நடைமுறை வாழ்விலும், அரசியலிலும் புகுத்தி வெற்றி பெற்ற பெருமை காந்தி அண்ணலையே சாரும்.

அருளறம் அடிகளையும் வள்ளுவரையும் நெருக்கமாகப் பிணைக்கிறது. அருளுடைமை, அன்புடைமை, இனியவை கூறல், இன்னா செய்யாமை, ஈகை, ஒப்புரவறிதல், கண்ணோட்டம், கொல்லாமை, புலான் மறுத்தல், வெகுளாமை, வெருவந்த செய்யாமை என வள்ளுவரால் விரித்துரைக்கப்படும் அறங்கள் யாவும் அருளறத்தின்

பல்வேறு வடிவங்களே. காந்தியடிகளும் அரு ளறத்திற்குப் பல விடங்களில் பலவிதமான விளக் கங்கள் கொடுக்கிருர். அவ் விளக்கங்களை யொட்டி, அவருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளும் அமைந் திருக்கின்றன.

அருளறம் என்னும் வித்தை முதன் முதலில் அடிகளின் உள்ளத்தில் ஊன்றிய பெருமை, ஏசு நாதரின் மலைச் சொற்பொழிவையே சாரும். அவ் வித்து முளைத்துச் செடியாகிப் பின் கவடு விட்டுப் பெரு மரமாக மாறுவதற்குக் காரணமாக இருந்த நூல் கீதையாகும். அப் பெருமரம் புயலுக்கும் அய ராது நிலைபேறு கொள்ளும் பொருட்டுத் தாங்கி நிற்கும் விழுதுகளாக அமைந்தன தால்ஸ்தாயின் நூல்கள்.

அடிகள் வாழ்வில் அருளறத்தின் தொடக்கம் தென்னுப்பிரிக்காவில் ஏற்பட்டது. தென்னுப்பிரிக்க இந்தியர்கள் புகை வண்டியில் எப்பொழுதும் மூன்ரும் வகுப்பிலேயே செல்லவேண்டும். இரண் டாம் வகுப்பிலோ அல்லது முதல் வகுப்பிலோ அவர்கள் செல்வதற்கு முடியாது. காந்தியடிகள் தாதா அப்துல்லா கம்பெனியாரின் வழக்குப் பற்றி டர்பன் நகரிலிருந்து பிரிட்டோரியா செல்லவேண்டி யிருந்தது. பிற்கால வாழ்வில் ஏழை மக்களுடன் மூன்ரும் வகுப்பிலேயே பிடிவாதமாகப் பயணம் செய்த காந்தியடிகள், இளமைக் காலத்தில் உயர் வகுப்பில் பயணம் செய்வதைப் பெருமையாகக் கருதிக் கொண்டிருந்தார். மேல்நாடு சென்று பார்-அட்-லா பட்டம் பெற்ற வழக்கறிஞரான தாம், மூன்ரும் வகுப்பில் பிரயாணம் செய்வது கேவலம்

என்று கருதினர். முதல் வகுப்புச் சீட்டு ஒன்று வாங்கிக் கொண்டு வண்டியில் ஏறினர். வண்டி மாரிட்ஜ்பர்க் என்ற நிலையத்தை அடைந்தது, காந்தியடிகள் ஏறியிருந்த அதே பெட்டியில் ஒரு வெள்ளைக்காரரும் ஏறினர்; காந்தியடிகளை மேலும் கீழும் உற்றுப்பார்த்தார்; கறுப்பு மனிதர் ஒருவர் முதல் வகுப்பு வண்டியில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்ததும் அவருடைய உள்ளம் பெரும் சங்கடத்திற்கு ஆளாகி விட்டது போலும்! அவர் உடனே வெளியில் சென்று இரண்டு இரயில்வே அதிகாரிகளை அழைத்துக் கொண்டு வந்தார். எல்லோரும் காந்தியடிகளை உற்றுப்பார்த்துக் கொண்டு நின்றார்கள். கடைசியில் பிறிதோர் அதிகாரி அங்கு வந்தார். அவர் அடிகளைப்பார்த்துக் 'கீழே இறங்கு' சாமான் ஏற்றும் வண்டியில் போய் ஏறிக்கொள்!' என்றார்.

'என்னிடம் முதல் வகுப்புச் சீட்டு இருக்கிறது ஐயா!' என்று அடிகள் பணிவாகச் சொன்னர்.

'அக்கறையில்லை; இந்த வண்டியில் உனக்கு இடம் கொடுக்க முடியாது!' என்று அவ்வதிகாரி கூறினர்.

'டர்பனில் இந்த வண்டியிலே தான் எனக்கு இடம் கொடுக்கப்பட்டது. இதிலேதான் நான் பயணம் செய்வேன்' என்று உறுதியான குரலில் கூறினர் அடிகள்.

காந்தியடிகளின் உறுதியான மறுப்புரையைக் கேட்ட அதிகாரிக்குச் சினம் பொங்கியது. அவருடைய மீசை துடித்தது. 'நீயாக இந்த வண்டியை விட்டு இறங்குகிருயா? அல்லது போலீஸ்காரனை

அழைத்துப் பிடித்துத் தள்ளச் சொல்லட்டுமா ?" என்று கேட்டார்.

'நல்லது ; போலீஸ்காரன் வரட்டும். நாஞக இந்த வண்டியிலிருந்து நகரப் போவதில்லை' என்ருர் காந்தியடிகள். அதிகாரி கூறியது வெறும் மிரட்டலன்று. உண்மையாகவே போலீஸ்காரன் வந்தான். அவரைக் கையைப் பிடித்து இழுத்து வெளியே தள்ளிஞன். அவருடைய சாமான்களை எடுத்து வெளியே எறிந்தான். அப்போது குளிர் காலம். தென்ஞப்பிரிக்காவில் உயரமான இடங் களில் குளிர் அதிகம். மாரிட்ஜ்பர்க் நகரம் உயர மான இடத்தில் அமைந்திருந்தது. பொறுக்க முடி யாத குளிர். விடிய விடிய அக்கடும் குளிரில் அடி கள் நடுங்கிக்கொண்டு கிடந்தார். அப்போது தான் தம் உள்ளத்தில் அருளறம் முளைவிட்டுக் கிளம்பியது என்று கூறுகிருர் அடிகள். அதை அவர் வாயாலேயே கேட்போம்.

"வண்டி ஓடியது. குளிர் என்னைக் குடைந்தது. உயிர் நீங்குமோ என்று அஞ்சினேன். அருகிருந்த ஓர் அறைக்குள் புகுந்தேன். அங்கே ஒரு வெள்ளை உருவம் நின்றது. என் செய்வேன் ! பிறந்த நாடு நோக்குவதா ? அடிமைத் தளையை உடைக்க முயல்வதா ? என்ற எண்ணம் என் உள்ளத்தில் ஊசலாடியது. அந்த நேரத்தில் எனது வாழ்வில் படிந்து கிடந்த அருளறம் செயலில் பரிண மித்தது."

அருளறத்தைப் பற்றி அடிகள் ஓரிடத்தில் விளக்கும்போது, 'ஒருவன் அருள் நெறியாளஞக இருக்க வேண்டுமாஞல், அவன் தனக்கு ஊறு

செய்தவன் பால் சீற்றங்கொள்ளாதிருக்கக் கடமைப் படல் வேண்டும். அவனுக்குத் தீங்கு நினைத்தல் கூடாது. நன்மையே நினைத்தல் வேண்டும்' என்று கூறுகிறார். இவ்விளக்கத்திற்கு ஏற்றாற் போல், அடிகள் வாழ்வில் இரண்டு நிகழ்ச்சிகள் இடம் பெற்றன.

அந்த நாளில் டர்பனிலிருந்து பிரிடோரியாவுக்குப் போகும் வழி முழுவதும் புகைவண்டி வழி அன்று. வழியில் சார்லஸ்டவுன் என்னும் புகைவண்டி நிலயத்தில் இறங்கிக் குதிரை வண்டியில் ஜோகன்னஸ்பர்க் சென்று, அங்கே மறுபடியும் புகைவண்டி ஏறவேண்டும். சார்லஸ் டவுனில் காந்தியடிகள் இறங்கினார். அவரிடம் குதிரை வண்டிச் சீட்டும் இருந்தது. ஆனால் குதிரை வண்டியின் தலைவன் எளிதான பேர்வழியன்று. கறுப்பு மனிதனை வண்டியில் ஏற்றிக் கொள்ளாமலிருக்க அவனுக்கு ஏதேனும் ஒரு சாக்குத்தான் தேவையாக இருந்தது. 'உம்முடையது நேற்றைய சீட்டு; இன்றைக்கு அது செல்லாது' என்றான். காந்தியடிகள் 'அது செல்லும்' என்று வாதாடினார். கடைசியாக வண்டிக்காரன் தோல்வி யடைந்து, காந்தியடிகளுக்குக் குதிரை வண்டியில் இடம் கொடுத்தான்.

அந்தக் குதிரை வண்டியில் பிரயாணிகள் உள்ளே உட்காருவது வழக்கம். வண்டிக்குள்ளிருந்த பிரயாணிகள் எல்லோரும் வெள்ளையர்கள். அவர்களுக்குச் சரிநிகராக ஒரு கூலியை (தென்னாப்பிரிக்க வெள்ளையர் இந்தியரைக் 'கூலி' என்று அழைப்பது வழக்கம்) வண்டிக்குள் உட்கார

வைக்க வண்டியின் தலைவன் விரும்பவில்லை. தான் உள்ளே உட்கார்ந்து கொண்டு வண்டி யோட்டிக்குப் பக்கத்து இடத்தில் காந்தியடிகளை உட்காரும்படி சொன்னான். இது அநீதி என்றும், அவமதிப்பு என்றும் அடிகளுக்குத் தெரிந்தே இருந்தது. ஆயினும் அவற்றைப் பொருட் படுத்தாமல் இருப்பதே நல்லது என்று அவர் நினைத்தார்.

வண்டி புறப்பட்டுச்சென்றது; பிற்பகல் மூன்று மணிக்குப் பர்தேகோப் என்னுமிடத்தை அடைந்தது. வண்டியின் தலைவன் வெளியில் சற்றுக் காற்றுட உட்கார்ந்து சுருட்டுப்பிடிக்க விரும்பினான்.

வண்டியோட்டி கீழேயிருந்து கால் வைத்து அவனுடைய பெட்டிமேல் ஏறுவதற்குப் படி ஒன்று இருந்தது. வண்டியின் தலைவன், வண்டியோட்டியிடமிருந்து அழுக்குப் படிந்த சாக்குத் துணியொன்று வாங்கி அந்தப் படியில் விரித்தான். காந்தியடிகளைப் பார்த்து, "சாமி !* இதில் உட்கார்! வண்டி யோட்டிக்குப் பக்கத்தில் நான் உட்கார வேண்டும்" என்றான். இந்த அநீதியைப் பொறுத்துக் கொள்ளக் காந்தியடிகளால் முடியவில்லை. உள்ளத்திற்குள் என்ன நேருமோ என்ற

* 'சாமி' என்ற சொல், இந்தியர்களைக் குறிப்பிடுவதற்காகத் தென்னாப்பிரிக்க வெள்ளையரால் பயன் படுத்தப்பட்டு வந்தது. தென்னாப்பிரிக்காவில் கூலியாகக் குடி புகுந்தவர்களில் பெரும்பாலோர் தமிழர்களே. அவர்களுடைய பெயர் இராமசாமி, கந்தசாமி, பெரியசாமி, பெருமாள்சாமி என்று பெரும்பாலும் இருந்ததால் இந்தியர்கள் எல்லோரையும் 'சாமி' என்ற பொதுப் பெயராலேயே வெள்ளையர் குறிப்பிட்டனர். "சாமி என்றால் 'எசமான்' என்று பொருள். நான் உம் எசமானா ?" என்று யாராவது துணிந்த இந்தியன், வெள்ளையரைக் கேட்டால் அவன் பிழைப்பது அரிது.

அச்சமும் தோன்றிற்று. அதனுல் உடம்பும் நடுங்கிற்று.

"நியாயமாக எனக்கு உள்ளே இடங்கொடுத்திருக்க வேண்டும். அவ்விதம் செய்யாமல் என்னே இங்கே உட்காரச் சொன்னீர். இப்போது நீர் இன்பமாகச் சுருட்டுக் குடிப்பதற்காக உம் காலடியில் உட்காரச் சொல்கிறீர். இது சரியன்று. உள்ளே இடங்கொடுத்தால் போய் உட்கார்ந்து கொள்கிறேன். படியில் உட்கார முடியாது" என்று அடிகள் திட்டமாகச் சொல்லிவிட்டார்.

காந்தியடிகள் இப்படிச் சொல்லி முடிப்பதற்குள் வண்டியின் தலேவன் அருகில் நெருங்கினுன்; அடிகளின் கன்னத்தைப் பார்த்து ஓங்கி அறைந்தான்; கையைப் பிடித்து கீழே இழுத்துவிட முயன்ருன். அடிகளின் மன உறுதி அப்போது பெரும் சோதனேக்கு உள்ளாகியது. வண்டிப் பெட்டியின் பித்தளேக் கம்பிகளே அவர் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். மணிக்கட்டு முறிந்தாலும் பிடியை விடுவதில்லே என்று உறுதி கொண்டார். அவரை அந்தக் கொடியோன் அடிப்பதையும், திட்டிக் கொண்டே இருப்பதையும் மற்றப் பிரயாணிகள் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அடித்தவன் பெருந்தடியன்; அடிபட்டவரோ வலுவற்று மெலிந்த மனிதர். அந்த வெள்ளேக்காரப் பிரயாணிகளுள் சிலர் இரக்கம் அடைந்தார்கள். வண்டியின் தலேவனேப் பார்த்து, 'ஏன் அப்பா அவரை அடிக்கிருய்? அவர் சொல்லுவது நியாயந்தானே? அங்கே இடமில்லா

விட்டால் உள்ளே வந்து உட்காரட்டும்!' என்றார்கள். அவன் பிறகு அடிப்பதை நிறுத்தினான்; வண்டியோட்டியைப் படியில் உட்காரவைத்து விட்டு, அவன் அமருமிடத்தில் உட்கார்ந்து கொண்டான்; அடிக்கடி காந்தியடிகளை விறைத்துப் பார்த்தும், விரலை ஆட்டிக்கொண்டே, 'இரு இரு! ஸ்டாண்டர்ட்டன் போனதும் உனக்குச் சரியான பாடம் கற்பிக்கிறேன்' என்று உறுமுவதுமாயிருந்தான். பிரிடோரியாவுக்கு உயிரோடு போய்ச் சேருவோமா என்ற கவலை காந்தியடிகளுக்கு உண்டாகிவிட்டது. இருட்டிய பிறகு குதிரை வண்டி ஸ்டாண்டர்ட்டனை அடைந்தது. வண்டி நின்ற இடத்தில் சில இந்தியர்கள் நின்றுகொண்டிருந்ததைப் பார்த்ததும் அடிகள் உள்ளத்தில் ஆறுதல் ஏற்பட்டது. அந்த ஊரிலிருந்த குதிரை வண்டிக் கம்பெனியின் முதலாளிக்குக் காந்தியடிகள் வழியில் நடந்த விவரமெல்லாம் தெரிவித்துக் கடிதம் எழுதினார்.

'இந்த ஊரிலிருந்து வேறு பெரிய வண்டி போகிறது. வண்டித் தலைவனும் மாற்றப்படுகிறான். பிற பிரயாணிகளோடு உமக்கு வண்டிக்குள்ளேயே இடம் தரப்படும்' என்று அம்முதலாளி பணிவோடு எழுதியிருந்தான். மேற் கூறிய குதிரை வண்டி நிகழ்ச்சியைப் பற்றிக் காந்தியடிகள் தமது வரலாற்றில் விவரித்து விட்டு முடிவுரையாகப் பின்வருமாறு எழுதியிருக்கிறார் :

'என்னை அடித்த குதிரைவண்டித்தலைவன் மீது அதற்குமேல் வேறு நடவடிக்கை எதுவும் எடுக்க

நான் விரும்பவில்லை. ஆகவே அந்த நிகழ்ச்சி இத்துடன் முடிவு பெற்றது.'

காந்தியடிகள் பிரிடோரியாவில் வாழ்ந்த போது வேறொரு குறிப்பிடத்தக்க துன்ப நிகழ்ச்சி அவருடைய வாழ்க்கையில் ஏற்பட்டது. பிரிடோரியாவில் காந்தியடிகள் நாள்தோறும் மாலையில் திறந்த வெளியில் உலாவி விட்டுத் திரும்புவார். சாலையின் இருமருங்கிலும் கால் நடையாகச் செல்வோருக்கெனக் கெட்டியான நடைபாதை அமைந்திருந்தது. அடிகள் அப்பாதையின் வழியாகவே மெதுவாக நடந்து செல்வது வழக்கம். பாதையோரத்தில் பிரிடோரியாவின் முதலமைச்சரான திருவாளர் குருகரின் வீடு அமைந்திருந்தது. அவ்வீடு ஆடம்பரமற்ற சிறிய வீடு. அவ்வீட்டின் வாயிலில் எப்போதும் ஒரு காவற்காரன் நின்று கொண்டிருப்பது வழக்கம். அதைக் கொண்டே அது ஓர் அமைச்சரின் வீடு என்பதை அறிந்து கொள்வார்கள்.

காந்தியடிகள் நாள்தோறும் அவ்வழியில் செல்வதை, அவ்வீட்டு வாயிலில் நின்றிருந்த காவற்காரன் பார்த்திருக்கிறான். அப்போதெல்லாம் அடிகளை அவன் ஒன்றும் சொன்னதில்லை. ஒருநாள் புதிய காவல்காரன் ஒருவன் குருகரின் வீட்டு வாயிலில் நின்று கொண்டிருந்தான். காந்தியடிகளை அப்பாதையில் கண்ட புதிய காவற்காரன் பெருஞ்சினம் கொண்டான். 'கறுப்புக் கூலி ஒருவன் நடைபாதையில் நடப்பதா? அதுவும் பேரமைச்சர் இல்லத்தின் முன்பாகவா? என்ன துணிச்சல் இவனுக்கு?'

என்று அக்காவற்காரன் நினைத்தான். ஏனென்றால் தென்னாப்பிரிக்க நகரங்களின் முக்கிய நடைபாதைகளில், கறுப்பர்கள் நடக்க இடங் கொடுக்கப்படுவதில்லை.

முன்பின் பார்க்காமல், ஒரு சொல்லும் கூறாமல் விரைவாக ஓடிவந்து அவன் காந்தியடிகளைக் காலாலுதைத்து நடைபாதையிலிருந்து தள்ளிவிட்டான். அடிகள் திடுக்கிட்டார்; மெதுவாக எழுந்தார்; அவனைக் காரணம் கேட்க வாயைத் திறந்தார். அப்போது எதிர்ப்புறத்திலிருந்து அவருடைய வெள்ளைக்கார நண்பரொருவர் குதிரை மீது சவாரி செய்து கொண்டு வந்தார். அவர் அடிகளைப் பார்த்து, 'மிஸ்டர் காந்தி! இங்கு நடந்த அநீதியை நான் கண்ணால் கண்டேன். இவன் செயல் மிகவும் கொடியது. நீங்கள் இவன் மீது வழக்குத்தொடருங்கள். நான் சாட்சி சொல்லுகிறேன்' என்று கூறினார். ஆனால் காந்தியடிகள் அதற்கு உடன்படவில்லை.

'அன்பரே இதில் வழக்குத் தொடர வேண்டிய இன்றியமையாமை என்ன இருக்கிறது? இவன் ஆயிரக்கணக்கான இந்தியரிடம் நடந்து கொள்வது போலவே என்னிடமும் நடந்துகொண்டான். உங்களைப்போன்று படித்து நாகரிகம் பெற்ற வெள்ளையர்களே எங்களைக் 'கூலி' என்று கருதி வெறுக்கும் போது, ஒன்றுமறியாத இக்காவற்காரனைக் குறை கூறுவதில் எவ்விதப் பயனுமில்லை. குற்றம் உம்மைப் போன்ற பெரிய மனிதர்களுடையது!' என்று அடிகள் அமைதியாகக் கூறினார்.

அடிகள் அப்போது தென்னாப்பிரிக்காவில் நன்கு விளம்பரமாகி யிருந்தார். அவருக்கு நல்ல செல்வாக்கும் இருந்தது. அவர் நினைத்திருந்தால் அக்காவற்காரனுக்குத் தக்க தண்டனை வாங்கிக் கொடுத்திருக்க முடியும். ஆனால் அவர் அதை விரும்பவில்லை. 'பகைமையை அன்பால் வெல்ல வேண்டும்; இன்னா செய்தார்க்கும் இனியவே செய்ய வேண்டும்' என்ற கொள்கையே அவரைப் பழிவாங்கும் எண்ணத்திலிருந்து காத்தது என்று சொல்லலாம். அடிகளின் கொள்கையையும் வள்ளுவரின் கீழ்க்கண்ட குறட்பாக்களையும் ஒப்பிட்டுக் காண்போமாக:

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறை
போற்றி யொழுகப் படும். [யுடைமை

திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல்.

கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்.

இனி அடிகள் கொடிய விலங்குகளிடத்தும், தாவரங்களிடத்தும் கூட அருள் நெறியாளராக

விளங்கினார் என்பதற்கு ஓரிரு எடுத்துக்காட்டுகள் கூற விரும்புகிறேன். 1917ஆம் ஆண்டு ஒருநாள் மாலை வழிபாட்டை முடித்துக்கொண்டு அடிகள் விடுதிக்கு வந்தார். ஒரு தலையணையைத் தாங்கலாக முதுகுக்கு வைத்துக் கொண்டு நண்பர்களோடு உரையாடத் தொடங்கினார். அன்று குளிர் மிகவும் கடுமையாக இருந்தது. அன்னை கஸ்தூரி பாய் ஒரு வெள்ளைப் போர்வையைக் கொண்டு வந்து அடிகளின் உடலில் போர்த்தார். சிறிது நேரம் கழிந்ததும் அருகிலிருந்த திருவாளர் ராவ்ஜிபாய் படேல், அடிகளின் உடல்மேல் படிந்திருந்த போர்வையை உற்றுப்பார்த்துக்கொண்டிருந்தார். வெண்மையான அக்கதர்ப் போர்வையில் கருமையான நீண்ட பொருள் ஒன்று தென்பட்டது. உற்றுப் பார்த்ததும் அது ஒரு பாம்பு என்பதை ராவ்ஜி அறிந்து கொண்டார். ராவ்ஜி தம்முடைய போர்வையையே உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதை அறிந்த அடிகள், யாதென வினவினார்.

'ஒன்றுமில்லை பாபு! ஒரு பாம்பு உங்கள் முதுகின் மேல் இருக்கிறது. சற்றுநேரம் ஆடாமல் அசையாமல் அமைதியாக இருங்கள்!' என்று ராவ்ஜி சொன்னார்.

'சரி! அப்படியே இருக்கிறேன்' என்று சொல்லி விட்டு அடிகள் அமைதியாக இருந்தார். பாம்பு முதுகிலிருந்து அவருடைய தோளின்மேல் ஏறியது. மேலே செல்வதற்கு வழி ஏதும் இன்மையால் மீண்டும் முதுகு வழியாகக் கீழே இறங்கியது. அதற்குள்ளாக ராவ்ஜி அப்போர்வையைப் பாம்

புடன் சுருட்டி, அடிகள் உடலினின்றும் அப்புறப் படுத்திவிட்டார். அடுத்த நாள், செய்தித்தாள் களில் இந்நிகழ்ச்சி பலவாருக வெளியிடப்பட்டது. 'ஒரு நாகப்பாம்பு காந்தியடிகளின் தோள் மேல் ஏறி, அவருடைய தலைக்கு மேல் தன்னுடைய படத்தை விரித்துக் குடை பிடித்தது. அவருக்கு நற்பேறு காத்துக் கொண்டிருக்கிறது. இந்திய நாட்டின் பேரரசராக முடிசூட்டிக் கொண்டு அர சாட்சி செய்யும் காலம் நெருங்கிவிட்டது' என் றெல்லாம் எழுதினுர்கள்.

இச்செய்தியைச் செய்தித் தாளில் படித்த திருவாளர் காகா காலேல்கர், அருகிலிருந்த அடி களைப் பார்த்து, 'பாம்பு உங்கள் தோளின் மேல் ஏறியபோது, நீங்கள் என்ன நினைத்தீர்கள்?' என்று கேட்டார்.

அதற்குக் காந்தியடிகள், 'பாம்பு என் தோளை அடைந்ததும் அச்சத்தால் ஒரு விஞடி திடுக்கிட் டேன். ஆனுல் அவ்வச்சமும் ஒரு விஞடிதான் இருந்தது. பிறகு அமைதியடைந்து விட்டேன். பாம்பு என்னைக் கடித்துவிட்டால், அதை யாரும் அடித்துக் கொல்லக்கூடாது என்று அருகிலிருந்த வர்களுக்குக் கூறவேண்டும் என்று எண்ணினேன். ஏனென்றல் பாம்பைக் கண்டவுடன், ஒரு மனித னின் உள்ளத்தில் தோன்றும் முதல் எண்ணம் அதை அடித்துக் கொல்லவேண்டும் என்பதுதான். ஆனுல் என்னைக் கடித்த பாம்பு, அச்சமும் ஆபத்து மின்றி அமைதியாகச் செல்ல வேண்டும் என்பது என் அவா' என்று சொன்னுர்.

காந்தியடிகளின் ஆசிரமம் சபர்மதியாற்றங் கரையில் ஏற்படுத்தப்பட்டது. அவ்விடம் ஒரு காடு. ஆசிரமத்தில் பாம்புகளின் நடமாட்டம் மிகுதியாயிருந்தது. ஆனால் ஆசிரம வாசிகள் பாம்பை அடிப்பதுமில்லை; அவைகள் யாரையும் கடிப்பதுமில்லை. காந்தியடிகளின் அருளறத்தைக் கொடும் பாம்புகளும் உணர்ந்தன போலும்!

ஒரு முறை காகா காலேல்கர் காந்தி யடிகளோடு எரவாடா சிறையில் இருந்தார். காலையில் பல் துலக்குவதற்காகச் சிறையிலிருந்த வேப்ப மரத்தில் ஒரு குச்சியை ஒடித்தார். ஒடிக்கும்போது சற்றுப் பெரிய கொம்பாக ஒடித்துவிட்டார். இதைக் கண்ட அடிகள், 'காகா! தாவரங்களுக்கும் உயிரும் உணர்வுமுண்டு என்ற உண்மையைத் திருவாளர் ஜகதீச சந்திரபோஸ் கண்டறிந்து உலகுக்கு வெளியிட்டுள்ளார். இது உனக்குத் தெரியாதா?' என்று கேட்டார். 'தெரியும்' என்று விடை யளித்தார் காலேல்கர்.

'பின் ஏன் மரத்தின் கிளையை ஒடிக்கிறாய்? தன்னுடைய உடலிலிருந்து ஓர் உறுப்பை இழந்தால் அம்மரம் துன்புறாதா?' என்று கேட்டார். இனிமேல் தாம் அவ்வாறு செய்வதில்லை என்று கூறி மன்னிப்புப் பெற்றார் காலேல்கர். என்னே அடிகள் அருளறத்தின்பால் கொண்ட பற்று!

பிறருடைய துன்பத்திற்காக இரங்குவது மட்டும் அருளறமாகாது என்பது வள்ளுவர் கொள்கை. அறிவுடைய மனிதன் என்பவன், பிறருடைய துன்

பத்தைத் தன்னுடைய துன்பமாகக் கருதவேண்டும் என்றும் கூறுகின்றார்.

> "அறிவினுன் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
> தந்நோய்போல் போற்றாக் கடை"

இக்குறளுக்கு மாபெரும் எடுத்துக்காட்டாக அடிகள் வாழ்ந்து வந்தபோது ஒரு தொழு நோயாளன் (குட்டரோகி) அவர் வீட்டுக்குப் பிச்சைக்காக வந்தான். நோய்களிலெல்லாம் கொடியது தொழு நோய். ஈயருந்த அழுகு தசை! எறும்பு மொய்க்க இற்றொழுகு புன்னீர்! அருகிற் சென்றால் அருவருப்பையூட்டும் தீ நாற்றம்! இக்கோலத்தோடு வரும் ஒருவனை ஏற்று உபசரிக்க யாருக்காவது உள்ளம் இடம் தருமா? ஆனால், அடிகள் அவன் நோயைத் தம் நோயாகக் கருதி உள்ளம் நைந்தார். அவன் ஓர் ஏழை இந்தியன். சொந்த நாட்டில் வாழ வழியற்றுத் தோட்டக் கூலியாக ஆப்பிரிக்க நாட்டுக்கு வந்தவன். வந்த இடத்தில் இப் பாழும் நோய் அவனைப் பற்றிக்கொண்டது. அதனால் அவன் வேலையும் போயிற்று. பசியின் கொடுமையால் பிச்சைக்காரனானான். அவனுடைய கதையைக் கேட்ட அடிகள் கண்ணீர் சொரிந்தார்; ஒருவேளை பிச்சையிடுவதால் அவன் துயரம் தீர்ந்துவிடாது என்பதை உணர்ந்தார்; அவனைத் தம் இல்லத்திலேயே வைத்துக்கொண்டு சிலநாள் மருத்துவம் புரிந்தார். புண்களெல்லாம் ஆறின.

தொழுநோய் கொண்டவனை எவ்வளவு நாள் வீட்டில் வைத்துப் பாதுகாக்க முடியும்? பிறருக்கும்

அந்நோய் தொற்றிக் கொண்டால் என்ன செய்வது என்று வீட்டிலுள்ளவர்கள் அஞ்சினர். எனவே, அவன் உடல் சிறிது குணமடைந்ததும், தோட்டக் கூலிகளுக்கான மருத்துவ மனையில் அவனைச் சேர்த்தார்.

இதேபோன்ற நிகழ்ச்சி அடிகள் இந்தியா வந்த பிறகும் ஏற்பட்டது. இந் நிகழ்ச்சி 1939 ஆம் ஆண்டு ஏற்பட்டது. கதிரவன் மேற்றிசையில் மறைந்து விட்டான். வழக்கம் போல் உலாவுவதற்காக அடிகள் 'சேவாக் கிராம'த்தை விட்டு வெளியில் கிளம்பிக் கொண்டிருந்தார். கையில் ஒரு துணி மூட்டையுடன் ஒருவர் ஆசிரம வாயிலில் நின்று கொண்டிருந்தார். அவர் ஒரு தொழு நோயாளர்.

'பாபு! நான் தங்களுடைய ஒப்புதலைப் பெற்றே இங்கு வந்திருக்கவேண்டும். நீங்களும் கடிதம் எழுதுவதாகக் கூறியிருந்தீர்கள். ஆனால், என் உள்ளம் அதுவரை பொறுத்திருக்கவில்லை. அரித்துவாரத்திலிருந்து புறப்பட்டு நேராக இங்கு வந்திருக்கிறேன். அரித்துவாரத்தில் என் கையினால் நூற்ற கதர் நூல் இம்மூட்டையில் உள்ளது. உங்களை நேரில் கண்டு நானே கொடுக்கவேண்டுமென்பதற்காக, இதைக் கொண்டு வந்திருக்கிறேன்' என்று கூறினார் அந்நோயாளி.

அந்நோயாளியின் பெயர் பார்ச்சூர் சாஸ்திரி. 1922 ஆம் ஆண்டு காந்தியடிகளோடு எரவாடா சிறையில் இருந்தவர். சிறையை விட்டு வெளி வந்த

தும் அவரை இந்நோய் பற்றிக்கொண்டது. வட இந்தியாவிலுள்ள சிறந்த மருத்துவ மனைகட்கெல் லாம் சென்று மருத்துவம் செய்து கொண்டார். நோய் வளர்ந்ததே தவிர நீங்கியபாடில்லை. இறுதி யில் காந்தியடிகளைச் சந்தித்துத் தம் நோயைப் பற்றிக் கூறினர். அவரை ஆசிரமத்தில் ஏற்றுக் கொண்டு மருத்துவம் செய்வதாகக் காந்தியடிகள் கூறியிருந்தார். அதற்காகவே சாஸ்திரியும் அங்கு வந்திருந்தார்.

அடிகள் சாஸ்திரியை நோக்கி, "அன்பரே! உங்களை ஆசிரமத்தில் சேர்த்துக் கொள்வது பற்றி இன்னும் நான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். இங்குப் பல ஆடவரும் பெண்டிரும் குழந்தை களும் இருக்கின்றனர். அவர்களையும் கலந்து பேசி உங்களுக்கு முடிவு சொல்லலாமென்றிருந்தேன்" என்று கூறினர்.

'தங்களைக் காணப் பெற்றதே என் நற்பேறு என்று கருதுகிறேன். அதோடு நான் மன நிறைவு கொள்கிறேன். தாங்கள் எப்போது வரச் சொல்கிறீர்களோ அப்போது வருகிறேன். இன்று இரவு மட்டும் இம்மரத்தடியில் தங்கியிருக்க இணங் கினல் போதும்' என்று சாஸ்திரி கூறினர். காந்தி யடிகளும் அதற்கு இணங்கினர்.

அன்று இரவு முழுவதும் அடிகளின் உள்ளத் தில் ஒரு பெரும் போராட்டம் நிகழ்ந்தது என்று சொல்லவேண்டும். தம் வாழ்வில் இந்நிகழ்ச்சி ஒரு பெரும் சோதனை என்று கருதினர். மறுநாட்

காலையில் ஆசிரம உறுப்பினர்களைக் கலந்து ஆலோசித்தார். அவர்களும் ஒப்புதல் அளித்தனர். அடிகளின் அறைக்குப் பக்கத்திலேயே சாஸ்திரியாருக்கு ஒரு சிறு குடிசை போடப்பட்டது. அடிகள் நாள் தோறும் சாஸ்திரியாரின் புண்களைத் தம் கையாலேயே அலம்பி, மருந்திட்டுக் கட்டினார்; நோய் தீருவதற்கேற்ற உணவை நாள்தோறும் கொடுக்குமாறு ஏற்பாடு செய்தார்; அன்றாடம் உணவைப் பார்வையிட்ட பிறகே சாஸ்திரியாருக்கு அனுப்புவார்.

அப்போது நாட்டில் அரசியற் கொந்தளிப்பு மிகுந்திருந்தது. சட்ட மறுப்பைத் துவக்குவதற்கு வேண்டிய ஆயத்தங்களில் அடிகள் ஈடுபட்டிருந்தார்; இடைவிடாத பல அலுவல்களுக் கிடையிலும், நாள்தோறும் காலையில் உலாவிவிட்டுத் திரும்பியதும், நேராகச் சாஸ்திரியின் குடிலுக்குச் செல்லுவார்; அவருடன் அன்புடன் உரையாடுவார்; சிரித்து மகிழ்வார். சாஸ்திரி வடமொழியில் பேரறிஞர்; கவிதை இயற்றுவதில் வல்லவர். அவருடைய கவிதைகளைக் கேட்டு அவற்றின் இன்பத்தில் அடிகள் திளைப்பார். வாரந்தோறும் மௌன விரதம் கடைப்பிடித்தொழுகும் நாட்களில், மரத்திலிருந்து புதிதாகப்பறித்த ஆரஞ்சுப் பழம் ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டு சாஸ்திரியாரிடம் செல்வார்; அப்பழத்தை அன்புடன் கொடுப்பார். இருவரும் அன்பைப் பரிமாறிக் கொள்வர்.

சாஸ்திரியார் இரண்டாண்டுக் காலம் ஆசிரமத்தில் தங்கியிருந்தார். நோய் பெரும்பாலும் குண

மாகிவிட்டது. காந்தியடிகள் இத்தொண்டின் மூலம் அருளறத்தின் உச்சிக்கே சென்று விட்டார் என்று கூறலாம்.

'அன்பு அறத்திற்கு மட்டுமே துணையாவது என்று அறியாதவர்கள் கூறுவார்கள். ஆனால் மறத்தை நீக்குதற்கும் அன்புதான் துணைசெய்கிறது' என்று பொய்யா மொழியார் கூறுகிறார்.

' அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.'

அருளறம் கோழையின் கருவி என்று சிலர் கருதுகின்றனர். அச்சத்தின் காரணமாகவே ' அஹிம்சை ' தோன்றுகிறது என்று சிலர் எள்ளி நகையாடுகின்றனர். ஆனால் அஞ்சாமையிலிருந்தே அருளறம் தோன்றுவதாக அடிகள் கூறுகிறார்.

அடிகளின் அருளறம் அஞ்சாமையின் அடிப்படையிலேயே தோன்றியது என்பதை அடிகளின் வாழ்க்கை நிகழ்ச்சிகளின் மூலம் காண்போம். அடிகள் முதன் முறை தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியா திரும்பியதும், தென்னாப்பிரிக்க இந்தியர் வெள்ளையரின் கொடுமைக்கு ஆட்பட்டு வருந்தும் நிலையைப் பம்பாய், பூனா முதலிய இடங்களில் பெருங்கூட்டங்கள் கூட்டிப் பேசினார் ; செய்தித் தாள்களில் கட்டுரையாக எழுதி வெளியிட்டார் ; சிறு நூலாக அச்சிட்டு நாடெங்கும் விற்பனை செய்தார். இதை அறிந்த தென்னாப்பிரிக்க வெள்ளையர்கள் காந்தியடிகளின் மேல் அடங்காச் சினம் கொண்டனர்.

இரண்டாம் முறையாகக் காந்தியடிகள் தென்னாப்பிரிக்கா சென்றார். அவர் ஏறிச் சென்ற 'கோர்லாண்டு' என்ற கப்பல் டர்பன் துறைமுகத்தை அடைந்தது. தென்னாப்பிரிக்க வெள்ளையரிடமிருந்து அடிகளுக்குப் பல அச்சுறுத்தல் கடிதங்கள் வந்தன. 'காந்தி! திரும்பிப் போய்விடு. திரும்பிப்போக இணங்கினால் பயணச்செலவைக் கொடுத்துவிடுகிறோம். திரும்பிப்போக இணங்காவிட்டால் கடலிலே தள்ளிச் சாகடித்து விடுவோம்!' என்பன போன்ற அச்சுறுத்தும் செய்திகள் அக்கடிதங்களில் காணப்பட்டன. டர்பனிலிருந்த நண்பர்கள், 'இங்குள்ள வெள்ளையர்கள் உங்கள்பால் மிகுந்த சினங் கொண்டிருக்கிறார்கள். இது உங்களுக்குத் தெரிந்ததே. ஆகையால் நீங்களும் உங்கள் குடும்பத்தாரும் பகலில் கப்பலிலிருந்து இறங்க வேண்டாம். நன்றாக இருட்டிய பிறகு இறங்குங்கள்' என்று அடிகளுக்குச் செய்தி அனுப்பினார்கள்.

சிறிதுநேரம் சென்றதும், திருவாளர் இலாப்டன் என்ற வெள்ளைக்கார வழக்கறிஞர் ஒருவர் வந்தார். அவர் அடிகளின் நெருங்கிய நண்பர். இருட்டில் திருடனைப்போல் மறைந்து செல்லும் யோசனை தமக்குப் பிடிக்கவில்லை என்று அவர் அடிகளிடம் சொன்னார். காந்தியடிகளின் எண்ணமும் அதுதான். உடனே அன்னை கஸ்தூரிபாயையும், குழந்தைகளையும் ஒரு வண்டியிலேற்றி ரஸ்டம்ஜியின் வீட்டுக்கு முன்னதாகவே அனுப்பிவிட்டார். கப்பல் தலைவரிடம் விடை பெற்றுக்கொண்டு காந்தியடிகள் தம் நண்பருடன் கப்பலிலிருந்து இறங்கி, இரண்டு கல்

தொலைவிலிருந்த ரஸ்டம்ஜியின் வீட்டுக்கு நடந்து செல்லத் தொடங்கினார்.

கப்பலிலிருந்து இறங்கிச் சிறிது தூரம் செல்வதற்குள்ளே வெள்ளைக்காரச் சிறுவர்கள் சிலர் அவரைப் பார்த்து இன்னார் என்று தெரிந்து கொண்டார்கள். உடனே அவர்கள், 'காந்தி! காந்தி!' என்று கூச்சல் போட்டார்கள். அந்தக் கூச்சலைக் கேட்டுவிட்டு நான்கு புறத்திலும் சிறுவர்களும் பெரியவர்களும் ஓடிவரத் தொடங்கினார்கள்.

இதைப் பார்த்ததும் இலாப்டனுக்கு மிகவும் அச்சம் ஏற்பட்டது. கூட்டம் பெரிதாய்விட்டால் தொல்லை நேரலாம் என்றும், அடிகள் மேலே நடந்து செல்ல முடியாமல் போய்விடலாம் என்றும் எண்ணினார்; ஆகையால் பக்கத்தில் நின்ற ஒரு ரிக்ஷாவைக் கூவி அழைத்தார். மனிதன் இழுக்கும் வண்டியாகிய ரிக்ஷாவில் காந்தியடிகள் ஏறுவதே இல்லை. அச்சமயம் இலாப்டனுடைய வற்புறுத்தலுக்காக அதில் ஏற ஒத்துக்கொண்டார். ஆனால் கூட்டத்தினர் ரிக்ஷாக்காரனை மருட்டித் துரத்தி விட்டார்கள்; இலாப்டனையும் இழுத்துப் புறம் விடுத்தார்கள்; காந்தியடிகளின் மீது கற்களை வீசினார்கள்; கையால் அடிக்கவும் குத்தவும் தொடங்கினார்கள். அடிகளின் உடல் தளர்ந்தது; தலை சுற்றத் தொடங்கியது. கீழே விழுந்து விடாமலிருக்கும் பொருட்டுப் பக்கத்திலிருந்த வீட்டின் முன்புற வேலிக்கம்பிகளைப் பிடித்துக்கொண்டார். அவரைச் சூழ்ந்திருந்த கூட்டம் மேலும் மேலும்

நான்கு புறத்திலும் அவரை நெருக்கியது. அவர் மூச்சுவிடவும் முடியாத நிலைமை ஏற்பட்டது.

அச்சமயத்தில் அவ்வூர் போலீஸ் அதிகாரி திருவாளர் அலெக்சாண்டரின் மனைவி, அப்பக்கமாக வந்தார். மக்களின் வெறிச் செயலைக் கண்ட அவர், அடிகள் நின்று கொண்டிருந்த இடத்தை அடைந்தார்; தம் குடையை விரித்துப் பிடித்துக் கொண்டு நின்றார். அதனால் கூட்டத்தினர் காந்தியடிகளை நெருங்கவோ அல்லது அடிக்கவோ முடியாமல் போயிற்று. திருமதி அலெக்சாண்டர் மீது அடிபடாமல் காந்தியடிகளை அடிக்க முடியவில்லை.

இதற்குள்ளாகத் திருவாளர் அலெக்சாண்டருக்குச் செய்தி எட்டியது. உடனே சில போலீஸ்காரர்களுடன் அவ்விடத்திற்கு வந்தார்; அடிகளை அக்கூட்டத்தினிடமிருந்து விடுவித்து ரஸ்டம்ஜியின் வீட்டில் கொண்டு சேர்த்தார். அங்கும் வெள்ளையர்கள் பெரும் திரளாகக் கூடிவிட்டனர். ரஸ்டம்ஜியின் வீட்டைச் சூழ்ந்து கொண்டு, 'காந்தியை வெளியே அனுப்பு' என்று கூச்சலிட்டனர். கூட்டத்தினரின் உணர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியாது என்பதை உணர்ந்த அலெக்சாண்டர், அதற்காக ஒரு தந்திரம் செய்தார்.

'புளிப்பு இலந்தை மரத்தின்மீது
போல்லாத காந்தியைத் தூக்கிலிடு'—

என்ற ஒரு பாட்டைத் தாமே இட்டுக் கட்டிப் பாடினார். கூட்டத்தினரும் அவருடன் சேர்ந்து உற்சாகமாகப் பாடினர். அதற்குள்ளாக அடிகள்

காவல் நிலையத் (Police Station) திற்குப் பாதுகாப்புடன் அழைத்துச் செல்லப்பட்டார்.

காந்தியடிகள் தாக்கப்பட்ட செய்தி அடுத்த நாள் செய்தித் தாள்களில் வெளியாயிற்று. இங்கிலாந்திற்கும் இச்செய்தி எட்டிற்று. இதை அறிந்த குடியேற்ற நாட்டு அமைச்சரான திருவாளர் ஜோசப் சேம்பர்லின், 'காந்தியைத்தாக்கியவர்களைச் சிறை செய்து அவர்கள் மீது வழக்கு நடத்தவும்' என்று நேட்டால் அரசியலாருக்குத் தந்தியடித்தார். உடனே நேட்டாலின் அரசாங்க வழக்கறிஞர், காந்தியடிகளை அழைத்துச் சேம்பர்லினுடைய தந்தியைப்பற்றிக் கூறினர்; அடிகளைத் தாக்கியவர்களின் மீது வழக்குத் தொடரப் போவதாகவும் சொன்னர்.

ஆனல் காந்தியடிகள் அதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. 'யார் மீதும் வழக்கு நடத்த எனக்கு விருப்பமில்லை. குற்றம் உங்களைப் போன்ற சமூகத் தலைவர்களுடையது. நீங்கள் மக்களுக்குச் சரியான வழி காட்டியிருக்க வேண்டும். இந்தியாவில் நான் இருந்தபோது, நேட்டால் வெள்ளைக்காரர்கள் மீது ஏதோ பொய்ப் பிரசாரம் செய்ததாக நம்பி, அவர்கள் இம்மாதிரி நடந்து கொண்டிருக்கிருர்கள். உண்மையை உணரும்போது அவர்களே தங்களுடைய செயலுக்காக வருந்துவார்கள்' என்று அடிகள் கூறினர்.

காந்தியடிகள் எப்போதும் குண்டர்களுக்கு அஞ்சுவது கிடையாது. கல்கத்தாவில் இந்து

முஸ்லிம் கலவரத்தை அடக்கச் சென்றபொழுது, அவர் தங்கியிருந்த ஹைதரி மாளிகையின்மீது சில குண்டர்கள் கல்லை வீசினர். அடிகள் வெளியே வந்தார்; நேராகக் குண்டர்கள் நின்று கொண்டிருந்த இடத்திற்கு விரைந்தார்; 'என்னைக் கொன்று விடுங்கள்! என்னைக் கொன்று விடுங்கள்!' என்று கூச்சலிட்டார். பிறகு அக்குண்டர்கள் தம் அறியாமைக்கும் தவறுக்கும் வெட்கிக் கலைந்து சென்றனர்.

ஒருமுறை தோட்டத் தொழிலாளிகளின் உரிமையைக் காப்பதற்காகச் 'சம்பரான்' என்ற இடத்தில் காந்தியடிகள் ஒரு போராட்டம் நடத்துவதற்கு வேண்டிய ஆயத்தங்களில் ஈடுபட்டிருந்தார். அத்தோட்ட முதலாளிகளில் பெரும்பாலோர் வெள்ளையர்கள். ஒரு வெள்ளை முதலாளி காந்தியடிகளைக் கொல்வதற்காகத் துப்பாக்கி வாங்கியிருந்தார். இதைக் கேள்விப்பட்ட காந்தியடிகள், ஒரு நாள் அத்தோட்ட முதலாளியின் மாளிகைக்குத் தனியாகச்சென்றார். 'நண்பரே! என்னைக் கொல்வதற்காகத் தாங்கள் துப்பாக்கி வாங்கி வைத்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். தாங்கள் என்னைக் கொல்ல விரும்பினால், இப்போது கொன்று விடுங்கள். அதற்காகவே நான் தனிமையில் வந்திருக்கிறேன்' என்று அடிகள் பணிவுடன் கூறினார். அவ்வெள்ளையர் வாயடைத்து நின்றார்.

நவகாளியில் இந்து முஸ்லிம் கலகம் மிகுந்திருந்தது. எங்குப் பார்த்தாலும் கொலை! கொள்ளை! வீடுகளெல்லாம் தீக்கு இரையாக்கப் பட்டன.

காந்தியடிகள் ஒவ்வொரு சிற்றூராகச் சென்று நிலைமையை நேரிற்கண்டு, அல்லலுற்ற மக்களுக்கு ஆறுதல் கூறினர். அவர்களுடைய துயர் துடைக்கத் தொண்டு புரிந்தார். ஒருநாள் நாராயணபுரி (Narayanpur) என்ற சிற்றூரைப் பார்வையிட்டுத் தம் இருப்பிடத்திற்குத் திரும்பினர். அவர் குளிக்கும்போது சோப்புப் பயன்படுத்துவதில்லை. அழுக்குத் தேய்க்க ஒரு கல்லையே பயன்படுத்தி வந்தார். அது மீராபென் என்ற அம்மையாரால் பல ஆண்டுகளுக்கு முன் அடிகளுக்குக் கொடுக்கப் பட்டது. அக்கல்லை அவர் பேர்த்தியான மனுபென் காந்தி நாராயணபுரியிலிருந்து எடுத்துவர மறந்து விட்டாள்.

உடனே போய் அக்கல்லை எடுத்துவரச் சொன்ஞர் அடிகள். மனுபென் தனியாகப் போய் அதை எடுத்துவர வேண்டுமென்பது அவர் கட்டளை. மனுபென் நாராயணபுரியை நோக்கி நடந்தாள். புறப்படும்போது காலை 9 மணி இருக்கும். வழியெல்லாம் அடர்ந்த தென்னந் தோப்புகளும், கமுகந் தோப்புகளும் மிகுந்திருந்தன. எளிதில் வழிதவறிப் போகலாம். அல்லது சமய வெறிபிடித்த கயவர்கள் அவளைத் தூக்கிக் கொண்டு சென்று விடலாம். உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு மனு நாராயணபுரியை அடைந்தாள். அக்கல்லும் கிடைத்தது. மனுபென் பிற்பகல் 2 மணிக்குக் காந்தியடிகளின் இருப்பிடத்தை வந்தடைந்தாள். இந் நிகழ்ச்சியை நினைக்கும்போதே உள்ளம் நடுங்குகிறது. கொலையும், கொள்ளையும், கீழ்ச் செயல்-

களும் மலிந்த தனி வழியில் இருபது வயது நிரம்பாத இளம்பெண்ணை அனுப்ப யாருடைய உள்ளம் துணிவு கொள்ளும்? அஞ்சாமை மிக்க அருள் நெறியாளரால் தான் அது முடியும்; 'மகாத்மா'க்களால் தான் முடியும்.

காந்தியடிகள் அறிவுறுத்தி வந்த அருளறக் கொள்கையிலிருந்து அவரே வழுக்கி வீழ்ந்ததாகச் சிலரால் கருதத்தக்க நிகழ்ச்சிகள், அவர் வாழ்வில் நிகழ்ந்துள்ளன. அவைகளில் நான்கைச் சிறப்பாக ஈண்டுக் குறிக்கிறேன். ஒன்று வெறி நாய்களைக் கொல்லுமாறு அடிகள் ஆணை தந்தது; இன்னொன்று ஆசிரமத்தில் நோய்வாய்ப்பட்ட ஒரு கன்றைக் கொல்லுவித்தது; மற்றொன்று, கெய்ரா மாவட்டத்தில் ஐரோப்பியப் பெரும் போருக்கு ஆள் சேர்த்தது; பிறிதொன்று ஒத்துழையா இயக்கத்தின்போது பிறநாட்டுத் துணிகளைத் தீக்கிரையாக்கியது.

முதலிரண்டிற்கும் அடிகள் அருளறத்தையே காரணமாகக் காட்டுகிறார். பின்னிரண்டு நிகழ்ச்சிகட்கும் அரசியலைக் காரணமாகக் காட்டுகிறார். அவ்விளக்கங்களை அடிகளின் 'சத்திய சோதனை'யில் காணலாம்.

❧

# 6. புலால் மறுத்தல்

இந்திய நாட்டில் தோன்றிய சமயங்கள் பல. அவை சைவம், சமணம், பௌத்தம், வைணவம் என்பன. இந்திய நாட்டுச் சமயங்கள் எல்லாம் புலால் உண்ணலை மறுத்தே கூறுகின்றன. கிறுத்தவ சமயம் புலாலை மறுத்துக் கூறவில்லை. ஏசு பெருமானே மீனைப் பகிர்ந்து அன்பர்கட்கு அளித்ததாக விவிலிய நூல் கூறும். மேலும் புலால் உணவு பற்றிய கொள்கையானது நாட்டுக்கு நாடு, இடத்திற்கு இடம் மாறுபடுகிறது.

சிலர் புலால் உணவைத் தூற்றியும், பலர் புலால் உணவைப் போற்றியும் கூறுகின்றனர். புலால் உணவை மிகவும் விரும்பிப் போற்றி வரும் மேலை நாடுகளில்கூட 'மரக்கறி உணவு உண்போர் கழகங்கள்' உள்ளன. இந்த நூற்றுண்டில் வாழ்ந்த தலைசிறந்த அறிஞர்களில் ஒருவரான பெர்ஞர்டு ஷா மரக்கறி உணவு உண்டவர். அவர் தொண்ணூறு ஆண்டுகட்குமேல் உயிர் வாழ்ந்தவர்.

புலால் உணவினரே, வேறு பல ஐயங்களைக் கிளப்புகின்றனர். புலால் மறுப்புக் கொள்கை உலகிலுள்ள எல்லா மக்களினத்துக்கும் பொருந்துமா? அப்படியாறல் உலகின் வடமுனை, தென்முனைப்

பகுதிகளில் (Polar Regions) வாழும் எஸ்கிமோ, லாப்ஸ் என்னும் இன மக்கள் மரக்கறி உணவு உண்பது எங்ஙனம்! சீல், வால்ரஸ், மீன் போன்ற கடல்வாழ் உயிர்களும், கலைமான்களுமே அங்கு வாழ்கின்றன. அப்படியென்றால் புலால் மறுப்பி லிருந்து அவர்கட்கு விலக்களிக்கலாமா? என்பன போன்ற வினாக்கள் எழுகின்றன. கொங்கணக் கடற்கரையில் வாழ்பவன் மீனையே உண்டு வாழ் கிறான்.

இருக்கு வேதமும், மனுநீதியும் புலால் உண் ணலை ஆதரிக்கின்றன. இளமையில் மனுநீதியின் பால் வெறுப்புக் கொண்டதற்கு இதுவே காரணம் என்று காந்தியடிகள் கூறுகிறார். இந்திய நாட்டில் புலால் மறுப்பு பல காரணங்களால் நிலைபேறு கொள் கிறது. சிலர் குலத்தின் அடிப்படையில் உண்ப தில்லை. சிலர் சமய அடிப்படையில் புலாலை வெறுக் கின்றனர். ஆனால் இவர்களெல்லாம் இன்றியமை யாமை ஏற்படும்போது புலாலை ஏற்கத் தவறுவ தில்லை. நோய்வாய்ப்பட்டு வருந்தும்போது, புலால் கலந்த மருந்தையும், சத்துப் பொருள்களையும் ஏற்றுக்கொள்ளத் தயங்குவதில்லை. புலாலை வெறுக் கும் எல்லாச் சமயத்தவரும் பக்குவப் படுத்தப் பட்டுப் புட்டியில் அடைக்கப்பட்ட முட்டை (Oval) யை எவ்வித வேறுபாடும் கருதாமல் உண் பதைக் காண்கிறோம்.

இவ்வாறு புலாலைப் பற்றிய கொள்கைகள் பல வாறாக உள்ளன. ஆனால் இந்திய சமயங்கள்

யாவும் புலால் மறுப்புக் கொள்கையை, அருளின் அடிப்படையிலேயே கூறுகின்றன. பிற உயிர்கள் கொல்லப்படுவதாலேயே, புலாலுணவு தீது என்று சமயவாதிகள் கருதுகின்றனர். உண்மையான புலால் மறுப்புக் கொள்கை இன்னா செய்யாமை, கொல்லாமை, அருளுடைமை என்பவற்றினின்றும் வளர வேண்டும்.

மனிதனையே தின்னும் மனித இனம் (Cannibals) ஒரு சில நாடுகளில் வாழ்ந்ததாக வரலாறு கூறுகிறது. நல்லவேளை! அவ்வினம் வரவர அருகி மறைந்துவிட்டது. இல்லாவிட்டால் மனித இனமே அழிந்திருக்கும். வங்காளத்தில் கொடிய பஞ்சம் ஏற்பட்டபோது மனித ஊனைக் கூடப் பசியின் காரணமாகப் பலர் உண்டதாகப் பங்கிம்சந்திரர் தம் 'ஆனந்த மடத்தில்' கூறுகிறார்.

காந்தியடிகள் 'மோட பனியா' என்ற வணிக குலத்தைச் சார்ந்தவர். அக்குலத்தவர் புலால் உணவை அடியோடு வெறுப்பவர். ஆனால் தீய நண்பர்களின் கூட்டுறவால் அடிகள் புலால் உணவை மேற்கொண்டார். புலால் உண்பது பாவம் என்றோ, அருளறத்திற்கு மாறுபட்ட செயல் என்றோ அவர் கருதவில்லை. 'ஆங்கிலேயர் புலால் உண்பவர். புலால் உண்பதால்தான் அவர்கள் வலிமை மிக்கவர்களாக விளங்குகின்றனர். நாமும் புலால் உண்டால்தான் வெள்ளையரை விரட்டி விட்டு, நாட்டிற்கு விடுதலை பெறமுடியும்' என்று நண்பர்கள் அறிவுரை வழங்கினர். அக்காரணத்

னாலேயே அடிகள் புலால் உணவை மேற்கொண்டார். நாச்சுவைக்காக அவர் புலால் உண்ணவில்லை.

இங்கிலாந்தில் வாழ்ந்தபோது கூடத் தாம் தாய்க்கு அளித்த வாக்குறுதியைக் காப்பதற்காகவே புலாலை உண்ணுமல் தவிர்த்திருந்தாராம். பிற்காலத்தில் தாம் சுயமாக வாழும்போது, புலால் உணவு உண்ண வேண்டுமென்று அவர் எண்ணினூர். முட்டை மரக்கறி உணவுதான் என்று மேல் நாட்டு அறிஞர்கள் முடிவு செய்திருந்தனர். அதனுல் இங்கிலாந்தில் வாழ்ந்தபோது அடிகள் கொஞ்சநாள் முட்டை சாப்பிட்டு வந்தார். ஆனுல் அதுவும் அன்னையின் கருத்துப்படி புலால் உணவே என்று எண்ணி, அதையும் விட்டு விட்டார்.

இங்கிலாந்தில் மரக்கறி உணவு உண்போர் கழகம் ஒன்று இருந்தது. அடிகள் அதில் உறுப்பினராளுர். அதன் செயற்குழு உறுப்பினராகவும் செயலாளராகவும் பணியாற்றியிருக்கிருர். திருவாளர் சார்ட் என்பார் எழுதியுள்ள 'மரக்கறி உணவுக் கொள்கை பற்றிய நியாயம்' (Plea for Vegetarianism) என்ற நூலையும், ஹோவார் வில்லியம்ஸ் என்பார் எழுதியுள்ள 'உணவின் அறம்' (The Ethics of Diet) என்ற நூலையும், டாக்டர் அன்னு கிங்போர்டு என்பார் எழுதியுள்ள 'உணவுக்கொள்கையில் நேரிய முறை' (The Perfect way in Diet) என்ற நூலையும் படிக்கும் வாய்ப்பு அடிகளுக்கு ஏற்பட்டது. இந்நூல்களே அடிகளின் உள்ளத்தை மரக்கறி உணவின்பால் ஈர்த்தன எனலாம்.

பின்னர் அருளறத்தைத் தம் வாழ்வின் அடிப் படைக் கொள்கையாக மேற்கொள்ளத் தொடங் கியதும், புலால் மறுப்பு அவரை வலிவாகப் பற்றிக் கொண்டது. முன்பு ஊசலாடிக் கொண்டிருந்த இக் கொள்கை அடிகளின் உள்ளத்தில் நிலைபேறு கொண்டது. தென்னுப்பிரிக்காவில் ஓராண்டு பழங் களையே உண்டு அடிகள் உயிர் வாழ்ந்தார்.

அருளறத்தின்பால் அடிகள் கொண்டிருந்த பற்று, பாலையும் புலால் உணவே என்று எண்ணு மாறு செய்தது. பால் ஆவின் குருதியன்றே? எனவே அதுவும் புலால் உணவு என்று அடிகள் கூறினர். 'பசு மனிதர்களுக்காக மடிசுரந்து பால் கொடுப்பதில்லை. அது தன் கன்றிற்காகவே பாலைக் கொடுக்கிறது. அப்படி யிருக்கும்போது, அதன் பாலை மனிதன் பெறுவது திருட்டு' என்று அடிகள் அருளறம் பேசினர். கல்கத்தாவில் பசுவிடமிருந்து மிகுதியாகப் பால் பெறுவதற்காக மக்கள் செய்த கொடுமைகளையும் வழி முறைகளையும் கேட்டு அடிகள் மிகவும் உள்ளம் வருந்தினர். அதிலிருந்து பல்லாண்டுகள் பால் உண்பதை நிறுத்திவிட்டார்.

கொடும் நோய்வாய்ப்பட்டு அடிகள் வருந்திய போது, 'பாலை உண்டால்தான் நீங்கள் பிழைக்க முடியும்' என்று மருத்துவர்கள் கூறிவிட்டார்கள். எனவே மருத்துவர்களின் வற்புறுத்தலுக்காகவும், அன்பர்களின் வேண்டுகோளுக்காகவும் அடிகள் வெள்ளாட்டுப் பாலுண்ண ஒப்புக்கொண்டார். அதிலிருந்து தம் வாழ்நாளின் இறுதி வரையிலும் வெள்ளாட்டுப் பாலே பருகி வந்தார்.

அடிகள் புலால் மறுப்புக் கொள்கையில் எவ் வளவு உறுதியாக இருந்தார் என்பதற்கு ஓர் எடுத் துக் காட்டுக் கூற விரும்புகிறேன். அவர் தென்னுப் பிரிக்காவில் வாழ்ந்தபோது, அன்னை கஸ்தூரிபாய் நோய்வாய்ப்பட்டார். அவர் உடல் நலம் மிகவும் குன்றியிருந்தது. 'மாட்டிறைச்சிச் சாறு (Beef Soup) அளித்தாலன்றி நோயாளி பிழைக்க முடியாது' என்று மருத்துவர் கூறிவிட்டார்.

அடிகள் அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. மருத்துவர் மிகவும் சினங்கொண்டார். 'நீர் படித்த முட்டாள்!' என்று அடிகளைத் திட்டினர்.

'கஸ்தூரிபாய் இணங்கினால் நீங்கள் கொடுக்க லாம். நான் அதற்குத் தடையாக இருக்கமாட் டேன்' என்று அடிகள் சொன்னர்.

ஆனால் அன்னையோ, 'நான் உங்கள் மடியில் தலையை வைத்துக் கொண்டு உயிர் விட்டாலும் விடுவேனே யன்றிப் புலால் அருந்தேன்' என்று கூறிவிட்டார். பின்னர், அடிகள் நீர் மருத்துவத் தின் மூலம் அவருடைய நோயைத் தாமே குணப் படுத்தினர். இந்நிகழ்ச்சியால் அவர்கள் புலால் மறுப்புக் கொள்கையில் எவ்வளவு பற்றுக்கொண் டிருந்தார்கள் என்பது விளங்கும்.

•••

# 7. காலந் தவறாமை

காந்தியடிகளின் வாழ்க்கையிலிருந்து உணர்ந்து கடைப்பிடிக்க வேண்டிய கொள்கைகள் பல. அவற்றுள் மாணவர்களுக்கு மிக இன்றியமையாத கொள்கை 'காலந்தவறாமை' (Punctuality) ஆகும். வாய்மை, அருளறம், புலால் மறுப்புப் போன்ற கொள்கைகளைக் கடைப்பிடிக்கப் பண்பட்ட உள்ளமும், தன்னல மறுப்பும் வேண்டும். ஆனால் காலந் தவறாமை என்னும் கொள்கையைக் கடைப்பிடிக்கச் சிறிதளவு முயற்சியும், அக்கொள்கையைப் பற்றிய நாணய உணர்வும் இருந்தால் போதும். எளிதில் நம் வாழ்க்கையில் அது படிந்து விடும்.

பொறியியல் வாழ்க்கை வாழும் இக்கால மக்கட்கு இக்கொள்கை மிகவும் வேண்டற்பாலதாகும். 'உண்பது நாழி, உடுப்பது நான்கு முழம்' என்ற அளவோடு இன்றைய வாழ்க்கை அமைந்திருக்கவில்லை. 'போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்ற ஆன்றோர் வாக்குப் பொய்யாய்ப் பழங்கதையாய்ப் போயிற்று. ஏழை செல்வனாகவும், செல்வன் பெருஞ்செல்வனாகவும் மாறும் குறிக்கோள்களே இன்றைய மக்களினத்தைப்பிடர் பிடித்துத் தள்ளுகின்றன. அரசியல், பொருளியல், சமூக

வியல், அறிவியல், கலை ஆகிய பல துறைகள் மக்களின் காலத்தைப் பகிர்ந்து கொள்கின்றன. 'இரவே இன்றி நாள் முழுதும் பகற்பொழுதாக இருக்கக்கூடாதா?' என்று சிலர் ஏங்குகின்றனர். 'ஒரு நாளைக்கு நாற்பத்தெட்டு மணி நேரம் இருந்தால் என்ன?' என்று எண்ணுவோரும் உண்டு. ஒரு செயற்கைச் சூரியனைக் கண்டுபிடித்து, இந்நிலவுலகில் படியும் இருளை ஒரேயடியாக நீக்குவதற்கு அறிவியல் கலைஞர்கள் முயற்சி செய்தாலும் செய்யலாம். பகலை இரவாகவும், இரவைப் பகலாகவும் மாற்றிக்கொண்டு செயற்கை வாழ்வு வாழும் பாட்டாளிகளை ஆலைகள் (Factories) நிறைந்த பெரு நகரங்களில் காணலாம்.

வள்ளுவப் பெருமான் காலத்தின் அருமையைக் 'காலமறிதல்' என்னும் அதிகாரத்தில் விரித்துரைக்கிறார்.

"பருவத்தோ டொட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு"

என்ற குறளில், 'பருவத்தோடொட்ட ஒழுகல்' என்னும் தொடருக்குக் 'காலத்தோடு பொருந்த வினை செய்தொழுகல்' என்று பொருள் கூறுகிறார் பரிமேலழகர். மேலும், 'காலத்தோடு பொருந்துதல் காலந்தப்பாமற் செய்தல்' என்று பொருள் விரிக்கிறார். காலமறிந்து ஏற்ற கருவிகளுடன் செய்தால், செய்தற்கரிய வினைகளென்று சொல்லப்படுவன ஏதுமில்லை என்பது வள்ளுவர் கொள்கை. அக்குறள் பின்வருமாறு:

"அருவினை என்ப உளவோ கருவியாற்
காலம் அறிந்து செயின்"

வள்ளுவர் 'காலமறிதல்' என்னும் அதிகாரத்தை அரசியற் பகுதியில் அமைத்து எழுதியிருக்கிறார். காலமறிதல் எல்லோருக்கும் இயைந்த ஒன்று என்றாலும், சிறப்பாக அரசியல் வாதிகளுக்கு ஏற்றது. அதனால்தான் காந்தியடிகள் 'காலந் தவறாமை'யைத் தம்முடைய தலையாய கொள்கைகளில் ஒன்றாகக் கருதிக் கடைப்பிடித்து வந்தார்; குறிப்பிட்ட காலத்தில் தம்முடைய வேலைகளைத் தவறாமல் செய்து முடிப்பார்; பிறர் காலந்தாழ்த்திச் செய்தாலும் கண்டிக்காமல் விடமாட்டார்.

ஒருமுறை திலகர் பெருமான் காங்கிரசு மாநாட்டிற்கு நாற்பத்தைந்து நிமிடம் தாமதமாக வந்தார். அக்காலத்தில் திலகர் இந்திய விடுதலை இயக்கத்தின் முடிசூடா மன்னராக விளங்கினார். அவருடைய நா அசைந்தால் இந்திய நாடே அசைந்தது. 'மராட்டிய அரியேறு' என்றும், 'லோக மான்யர்' என்றும் இந்திய மக்களால் பெருமதிப்போடு அழைக்கப்பட்டு வந்தார். காந்தியடிகள் அப்போது 'மகாத்மா' ஆகவில்லை. வெறும் மோகன தாஸ் கரம் சந்திர காந்தி என்ற அளவிலேயே இந்திய மக்களுக்கு அறிமுகமாயிருந்தார்; இந்திய அரசியல் உலகில் அப்பொழுதுதான் காலெடுத்து வைத்திருந்தார். இருந்தாலும் ஒரு பெரிய அரசியல் வாதி காலந்தவறி மாநாட்டிற்கு வருவதை அவரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. தம் பேச்சின் போது, 'திலகர் பெருமான் மாநாட்டிற்கு

நாற்பத்தைந்து நிமிடம் காலந்தாழ்த்தி வந்திருக்கிறார். நம் நாட்டின் உரிமையும் நாற்பத்தைந்து நிமிடம் காலந் தாழ்த்தியே வரும்' என்று நகைச் சுவையோடு கண்டித்தார்.

காந்தியடிகள் ஒருமுறை மராட்டிய நாட்டில் சுற்றுப் பயணம் செய்துகொண்டிருந்தார். மிராஜ் என்ற இடத்தில் ஒரு பொதுக்கூட்டம் ஏற்பாடாகியிருந்தது. அதை முடித்துக்கொண்டு உடனே அடுத்த ஊருக்குப் புறப்பட ஆயத்தமானார். ஆனால் மிராஜ் நகரவாசிகள் அடிகளை இன்னும் சிறிதுநேரம் தங்களிடத்தில் தங்கவைக்க வேண்டுமென்று பெரிதும் விரும்பினர். ஆனால் அடிகள் அதற்கு ஒத்துக்கொள்ளவில்லை. தம்முடைய உந்து வண்டி (Car) யைக் கொண்டு வருமாறு கூறினார். ஆனால் அவ்வூர் மக்கள் அது பழுதாகிவிட்டது என்று பொய் கூறினர். காந்தியடிகள் தம் அருகில் இருந்த சிலரை 'அடுத்த ஊருக்கு வழி எது?' என்று கேட்டார். அக்குறும்புக்காரர்களும் தவறான வழியைக் காண்பித்து விட்டனர். அடிகளும் அவர்கள் காட்டிய வழியில் நடந்தே புறப்பட்டு விட்டார். அப்போது அவர் காலில் செருப்புகள் கூட அணிவதில்லை.

கோபால கிருஷ்ண கோகலே அடிகளின் அரசியற் குரு. அவர் இறந்தபோது, ஓராண்டு செருப்பணிவதில்லை என்று அடிகள் உறுதி பூண்டிருந்தார்.

அவ்வழி வயற்புறமாக இருந்ததால் அடிகளின் காலில் முட்கள் தைத்தன; குருதியும் கொட்டிற்று.

ஆனால் அடிகள் தம் பயணத்தை நிறுத்தவில்லை. உடனே அவ்வூர் மக்கள் தம் செயலுக்காக வெட்கி, அடிகளை உந்து வண்டியில் ஏற்றி அடுத்த ஊரில் சேர்த்தனர்.

ஒருமுறை குஜராத்தி கலைமன்றத்தில் அடிகள் பேசவேண்டி இருந்தது. அடிகளின் ஆசிரமத்தி லிருந்து அம்மன்றம் இரண்டு கல் தொலைவில் அமைந்திருந்தது. ஆனால் குறிப்பிட்ட காலத்தில் மன்றத்தினர் வண்டி ஏதும் அனுப்பவில்லை. கூட்டம் துவக்க இன்னும் கால்மணி நேரமே இருந்தது. அடிகள் உடனே கால்நடையாகப் புறப்பட்டு விட்டார். எதிரில் அவருக்குத் தெரிந்த ஒரு மனிதர் மிதிவண்டியில் வந்து கொண்டிருந் தார். உடனே அம்மனிதரிடம் மிதிவண்டியைச் சிறிது நேரம் இரவல் கொடுக்குமாறு கேட்டார். அம் மனிதர் மிகவும் வியப்படைந்தவராய், மிதி வண்டியை அடிகளிடம் கொடுத்தார். அடிகளும் மிதிவண்டி யூர்ந்து குறிப்பிட்ட காலத்தில் கலை மன்றத்தை அடைந்தார். இடையில் கட்டிய ஒரு முழத் துண்டோடு, திறந்த மேனியராய் அடிகள் மிதிவண்டி யூர்ந்து வந்த காட்சி எல்லோரையும் திகைப்பிலாழ்த்தியது. ஏனென்றால் அடிகள் மிதி வண்டியூர்ந்து சென்ற காட்சியை இந்திய நாட் டில் யாரும் கண்டதில்லை.

ஃ

# 8. இல்லறம்

காந்தியடிகள் அரசியற் பணிக்காகவும், அரி ஜனங்களுக்காகவும், கோடிக் கணக்காகப் பொருள் திரட்டினர். ஆனல் அவர் இறுதியில் விட்டுச் சென்றவை, ஓரிணை செருப்பு, ஒருண்கலம், ஒரு சிறுகத்தி, ஒரு முட்கரண்டி, உடைந்த மூக்குக் கண்ணடி, ஒரு பெட்டி ராட்டை, மூன்று குரங்குப் பொம்மைகள். இவைதாம் அவருடைய சொத்து. இவைகளும் இப்பொழுது இந்திய மக்களின் பொதுவுடைமையாகிவிட்டன. இப் பொருள்களை நோக்கும்போது அடிகளின் துறவுள்ளம் தோன்றும். அப்படியானல் காந்தியடிகள் துறவியா? துறவிக்கு ஏன் குடும்பம்? இவர் இறுதிவரை குடும்பியாகவன்றே வாழ்ந்தார்? என்பன போன்ற வினக்கள் எழும். இவ் வினக்களுக்குச் சரியான விடை கூறவேண்டுமானல் 'அடிகள் இல்லறத்தில் வாழ்ந்த துறவி' என்று தான் கூறவேண்டும்.

காந்தியடிகளின் இல்வாழ்க்கை பற்றித் தமிழ்த் தென்றல் திரு வி. க. பின்வருமாறு கூறுகிறர்:

"ஒழுங்குபட்ட இல்வாழ்க்கை நடாத்தும் ஒருவன் கடவுள் ஆணைவழி நிற்பவனகின்றன்.

'இயல்பினுன் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான் முயல்வாருள் எல்லாம் தலை' என்றும், 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்-தெய்வத்துள் வைக்கப்படும்' என்றும், 'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்-பிறன்பழிப்ப தில்லாயின் நன்று' என்றும் ஆசிரியர் திருவள்ளுவனுர் இல்வாழ்க்கையின் மாண்பு தெரிவித்தல் காண்க. 'இல்லற மல்லது நல்லறமன்று' என்று ஒளவைப் பிராட்டியார் மிகச் சுருங்கிய சொற்களால் பெரும்பொருள் குறித்தல் ஓர்க.

"காந்தியடிகள் இப்பெற்றித்தாய இல்லற நெறி நின்று, வாழ்வு நடாத்தி, எவ்வுயிரையுந் தம்முயிர் போலெண்ணித் தொண்டு செய்யும் பேறு பெற்றிருக்கிருர். இல்லொழுக்கத்தில் காந்தியடிகள் நுழையா திருப்பரேல், உலகுய்ய உழைக்கும் அன்புள்ளத்தை அவர் பெற்றிருப்பாரோ? காந்தியடிகளின் தாய் தந்தையர் இல்லறம் பேணு தொழிந்திருப்பரேல் நம் பெரும் அடிகளை இவ்வுலகம் பெற்றிருக்குமோ? காந்தியடிகளை இவ்வுலகுக்கீந்த இல்வாழ்க்கை ஓங்கி வளர்க; வளர்க. அருளாளர் தோன்றுதற்கு நிலைக்களனுக உள்ள இல்வாழ்க்கை ஓங்கி வளர்க; வளர்க."

காந்தியடிகள் தம் வாழ்வின் பிற்பகுதியில் துறவியாகவே வாழ்ந்தார். அதே சமயத்தில் தம் மனைவியாரோடு உள்ளத்தால் ஒன்றுபட்ட உயர் வாழ்வு வாழ்ந்தார். ஆனுல் அவருடைய அன்பு இல்லறம் என்னும் எல்லைக்குள் சென்று முடியவில்லை. இதுபற்றித் திரு வி. க. குறிப்பிடும்போது

"ஒருவரிடத்துக் கட்டுப்பட்டுக் கிடக்கும் அன்பைப் பின்னை இருவரிடத்தும், பின்னைச் சில உயிர்களிடத்தும், பின்னைப் பல உயிர்களிடத்தும், முடிவில் எல்லா உயிர்களிடத்தும் பரப்பும் தன்மையுடையது இல்லறம். காந்தியடிகள் பால் கட்டுப்பட்டிருந்த அன்பு, முறைமுறையே கஸ்தூரிபாய் வழியும், அவர்கள் மக்கள் வழியும் வளர்ந்து, எல்லா உயிர்களிடையும் ஊடுருவிப் பாய்ந்து, அருள் வெள்ளமாய் ஓடியது. காந்தியடிகள் தமக்கென்று வாழ்ந்தார்? இல்லை. உலகுய்ய உழைக்கும் வாழ்வாக வன்றோ அவர் வாழ்வு இலங்கியது! இப்பேற்றை அவர்க்கு வழங்கியது எது? இல்லறமே. காந்தியடிகள் இல்லற நெறி நில்லாது வேறு வழி நின்றிருப்பாராயின், அவர் வாழ்வு 'தன்னல' வாழ்வாக முடிந்திருக்கும். ஆதலால் ஒழுங்குபட்ட இல்லறமே வாழ்க்கைக்கு வேண்டற்பாலது" என்று விளக்குகின்றார்.

தமிழ்த் தென்றலின் கூற்றுப்படி உலகமே காந்தி யடிகளின் குடும்பம். பிற உயிர்கள்பால் அவர் காட்டிய அன்பே, அவர் நடாத்திய இல்லறம். ஆனால் அவ்வில்லறமும் துறவுள்ளத்தோடு நடத்தப்பட்டது. கற்றைச் சடையையோ, காவி உடையையோ அவர் என்றும் போற்றினரில்லை. இல்லறத்திலிருந்தே பற்றை அறுத்தார். பாமரர்களுக்கும் ஏழைகளுக்கும் செய்யும் தொண்டைப் பரம்பொருளுக்குச் செய்யும் தொண்டாகக் கருதினார். அவருக்கு வாழ்க்கைத் துணையாக வந்து வாய்த்த கஸ்தூரிபாயும், 'மனைத்தக்க மாண்

புடைய'ராக விளங்கித் 'தற்காத்துத் தற்கொண் டான் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர் விலா'ராக—இல்லறம் நடாத்தினார்.

இல்லறத்தைப் பற்றியும் வாழ்க்கைத் துணை நலத்தைப் பற்றியும் அடிகள் பின்வருமாறு கூறுகிறார்:

'அருளறத்தின் உள்ளுறையை உணர்ந்த பின்னரே என்பாலிருந்த ஐயக்கேடுகள் நீங்கின. மனைவி என்பவள் கணவனின் அடிமையல்ல வென்றும், அவள் அவனது வாழ்க்கைத் துணை யென்றும், தோழியென்றும், இன்ப துன்பத்தில் எல்லா வழியிலுஞ் சம உரிமை உடையாளென் றும், வாழ்வுத் துறையில் தலைவனுக்குள்ள உரிமைக ளெல்லாந் தலைவிக்கும் உண்டென்றுந் தெளிய லானேன்.'

∴

# 9. அரசியலும் பொருளாதாரமும்

மக்களினம் நாகரிகம் பெற்ற காலம் தொடங்கி இன்றுவரை அரசியல் முறைகள் மாறிக்கொண்டிருக்கின்றன. ஒரு காலத்தில் சிறப்பாகத் தோன்றிய அரசியல் முறை, சிறிது காலத்தில் பயனற்றது என்று மக்களால் தூக்கி எறியப்படுகிறது. ஆனால் எல்லா அரசியல் முறைகளும், மக்களின் நல்வாழ்வே தம்முடைய குறிக்கோள் என்று பறை சாற்றிக் கொள்கின்றன.

வள்ளுவர் முக்காலமும் உணர்ந்த பேரறிஞர். அவர் வாழ்ந்த நாட்களில் முடியாட்சியே நடைபெற்று வந்தது. ஆனால் மக்களே ஆளும் ஆட்சி எதிர்காலத்தில் வரும் என்பதை அவர் அப்பொழுதே உணர்ந்தார் போலும். அதனால் அரசன் என்றோ வேந்தன் என்றோ குறிப்பிடாமல் பல இடங்களில் 'அரசு' என்று பொதுச் சொல்லால் குறிப்பிட்டுச் சொல்லுகிறார் :

"அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு."

"இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு."

இவ்விரண்டு குறட்பாக்களும் 'இறைமாட்சி' என்ற அதிகாரத்தின் உயிர்த்துடிப்பு எனலாம். முதற்குறள் அரசியலை (Politics) யும், இரண்டாம் குறள் பொருளியலை (Economics) யும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கின்றன. இவ்விரு குறட் பாக்களும் ஒன்றன் பின் ஒன்ருகக் கூறப்பட்டிருக் கின்றன. இப்பாக்களின் வைப்பு முறையை நோக் கின், அரசியலின் அடிப்படையிலேயே ஒரு நாட் டின் பொருளியலும் அமைந்திருக்கும் என்பது புலனுகும்.

'தனக்கோதிய அறத்தினின்றும் வழுவா தொழுகி, அறமல்லாதவற்றைத் தன்னுட்டின்கண் நிகழாமல் கடிந்து, வீரத்தில் வழுவாத தாழ்வின் மையினை யுடையான் அரசன்' என்பது முதற் குறளின் பொருள். இக் கொள்கைகட்கு மாறுபட்டு நடக்கும் எவ்வரசும் உண்மை அரசு ஆகாது.

'தனக்குப் பொருள்கள் வரும் வழிகளை மேன் மேலும் உளவாக்கலும், அங்ஙனம் வந்தவற்றை ஒருவழித் தொகுத்தலும், தொகுத்தவற்றைப் பிறர் கொள்ளாமல் காத்தலும், காத்தவற்றை மக்களின் நலன் பொருட்டு விடுத்தலும் வல்லவனே அரசன்' என்பது இரண்டாம் குறளின் பொருள். இக் குறட் பாவில் வகுத்துக் கூறப்படும் கொள்கைகளே உண் மையான பொருளியற் கொள்கைகள்.

இவ்விரு குறட்பாக்களும், சட்டம் (Law), அறமுறை (Justice), ஒறுப்பு (Punishment), வீரம் (Force), மானம் (Respect), பொருளாதாரத் திட் டங்கள் (Economic Plannings), ஆக்க வேலைத்

திட்டங்கள் (Constructive Programmes), சேமிப்பு (Savings), பொருளாதாரப் பங்கீடு (Distribution of Finance) ஆகிய பலவற்றையும் தம் மகத்தே கொண்டு விளங்குகின்றன. இக்குறட்பாக்கள் வகுத்துக் கூறும் கொள்கைகளைத் தம் குறிக்கோள் களாகக் கொண்டு, உலக அரசியல் முறைகள் நடைபெறுகின்றனவா என்பதைச் சுருக்கமாகக் காண்போம். உலகில் நடைபெறும் அரசு பல. அவை முடியரசு, சர்வாதிகார அரசு, குடியரசு என்பன.

முடியரசு : மக்களில் சிறந்த ஒருவன் முதன் முதலில் மன்னனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப் பான். அல்லது மக்களில் வலிமை மிகுந்த ஒருவன், பிறரைத் தன் ஆணைக்கு உட்படுத்தி அரச பீடத்தை அமைத்துக் கொண்டிருப்பான். மக்க ளின் நலன் பொருட்டே மன்னன் வாழவேண்டும் என்று எல்லோரும் எதிர் பார்த்தனர். முற்கால மன்னர்களும் அதையே தம் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தனர். அதனாற்றான் 'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' என்ற பொன் மொழி யும் தோன்றியது.

காலம் செல்லச் செல்ல மன்னன் 'இறைவன்' ஆனான். தான் மன்னனாகப் பிறந்தது இறைவனின் ஆணையால் என்று எண்ணினான். தன்னை அரச பீடத்திலிருந்து நீக்கவோ, தன் செய்கைகளைத் திருத்தவோ அல்லது மேற்பார்வையிடவோ இறை வனைத் தவிர வேறு யாருக்கும் உரிமை இல்லை என்று கருதினான். இக் கொள்கைக்கு, 'மன்னனின் தெய்விக உரிமை' (Divine Rights of the King)

என்பது பெயர். இக் கொள்கையை உடும்புப் பிடியாகப் பிடித்துக்கொண்டு வாழ்ந்த கொடுங் கோலன், ஆங்கில நாட்டை ஆண்ட முதலாம் சார்லஸ் ஆவான். இறுதியில் இவன் பாராளு மன்றத்தின் முன் வெட்டிக் கொல்லப்பட்டான்.

மக்களின் உயிராக வாழவேண்டிய மன்னன், அவர்கள் உயிரைக் குடிக்கவும், அவனுடைய சொந்த விருப்பு வெறுப்புகட்காக நாட்டைப் போரில் ஈடுபடுத்தவும், மக்களின் பொருளை வரி யால் சுரண்டி ஆடம்பரச் செலவு செய்யவும், நடு நிலைமை தவறி வேண்டாதாரை ஒறுக்கவும் தலைப் பட்டான். எனவே முடியரசு பயனற்றது என்று உலக மக்களால் கருதி ஒதுக்கப்படுகிறது.

**சர்வாதிகார அரசு :** மக்களின் செல்வாக்குப் பெற்ற ஒருவன் ஆட்சியைக் கைப்பற்றிக்கொண்டு, பின் தன் விருப்பம் போல் நாட்டை ஆட்டிவைப் பது சர்வாதிகாரம். இட்லர், முசோலினி ஆகி யோரின் ஆட்சி சர்வாதிகாரத்துக்குச் சிறந்த எடுத் துக் காட்டாகும். அந் நாட்டில் எண்ணுவதற்குக் கூட உரிமை கிடையாது. சர்வாதிகாரி எதை எண்ணுகிறானோ அதையே எல்லா மக்களும் எண்ணவேண்டும். இட்லரின் கொள்கைகளையே கவிஞர்கள் காவியமாகப் பாடினார்கள்; ஓவியர் களும், சிற்பிகளும், பாடகர்களும், நாடகக் கலை ஞர்களும், நூலாசிரியர்களும் அவனுடைய கருத் துக்களையே தம் கலைக்குக் கருப் பொருளாகக் கொண்டனர்.

உருசியா போன்ற பொது உடைமை நாடு (Totalitarian Countries)களில் மக்களாட்சி நடை

பெற்றாலும் அந்நாடுகளின் அரசியல் முறையையும் சர்வாதிகாரம் என்றே சொல்லவேண்டும். உருசிய மக்கள் பொது உடைமைக் கொள்கையின் மூலம் அடைந்த வெற்றியைக் கண்டு உலகமே வியந்தது. சுரண்டப்பட்ட மக்கள் சமுதாயம் அனைத்தையுமே காப்பதற்குத் தோன்றிய அருமருந்து என்று இக் கொள்கையை உலகம் வரவேற்றது. இவ்வாட்சி முறை மக்களின் வாழ்க்கைத் தரத்தைப் பெரிதும் உயர்த்தியது உண்மைதான். இஃது ஈவு இரக்க மில்லாமல் கடுமையான முறைகளை இடைவிடா மல் கைக்கொண்டு முதலாளி வகுப்பை வேருடன் களைந்தது. கூட்டங் கூட்டமாகக் கொலைகள் செய் யப்பட்டன. துரோகத்திற்காக விசாரணைகள் நடத் தப்பட்டுப் பலர் கொல்லப்பட்டனர்; நாடு கடத் தப் பட்டனர். பொது உடைமைக் கட்சியே பாட் டாளிகளின் சர்வாதிகாரியாகத் தலைமை ஏற்று ஆட்சியை நடத்தியது. பொது மக்களைக் கருத்தில் கொண்டு பொருளியல் வாழ்க்கைக்குத் திட்டம் வகுத்து, மக்களின் நன்மைக்காகத் தொழில், வாணிகம், பண்ட மாற்று ஆகியவற்றை அரசாங் கம் தன் கையில் வைத்துக்கொண்டு ஒழுங்கு படுத்தி வந்தது. எனவே வறுமையில் வாடிய நாடு கள் உருசியப் புரட்சியில், நம்பிக்கையும், உருசிய நாட்டின்பால் நன்மதிப்பும் கொண்டது இயற்கையே.

ஆனால், இப்போது எதிர்ச்சுழல் துவங்கி விட்டது. உருசிய நாட்டின் கொள்கைகளைப் பெரிதும் பாராட்டிப் பேசிய லூயி பிஷர், மாக்ஸ் ஈஸ்ட்மன் ஆண்டிரி—கைட், பிரெடா உட்லே

போன்ற பேரறிஞர் பலரும் இப்பொழுது பெருத்த ஏமாற்ற மடைந்தனர். முதலில் பொது உடைமைச் சமூகம் என்பது வகுப்புப் பிரிவினைகள் அற்ற தாயும், மக்களாட்சி முறையைக் கொண்டதாயும், உலக நாடுகளை அணைத்துக் கொள்ளும் போக்கை உடையதாயும் இருக்கவேண்டுமென்று கருதப் பட்டது. பாட்டாளி மக்களின் சர்வாதிகாரமும் சிறிதுகாலம் இருந்து மறைந்துவிடும் என்று கருதப் பட்டது. ஆனால் நடந்ததென்ன ?

பொது உடைமைச் சமூகம் வகுப்புப் பிரிவினை கள் அற்றதாக மாறாததுடன், 'ஆளும் இனத்தார்' என்ற வலிமை மிக்க புதிய வகுப்பினர் முளைத்துச் செல்வாக்குப் பெற்று விளங்குகின்றனர். மேலும் தனிப்பட்டவர் வருமானத்திலும் ஏற்றத்தாழ்வு நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது. சிலரது வரு வாய் வேறு சிலரது வருவாயைவிட எண்பது மடங்கு மிகுதியாகக் காணப்படுகிறது. அரசாங்கம் தனிப் பட்டோர் உரிமையை அடியோடு அடக்கி யாளும் போக்கைச் சிறிதேனும் தளர்த்துவதற்கு விருப்பப் படவில்லை. 'பாட்டாளி மக்களின் சர் வாதிகாரம்' மக்களை ஒரே அச்சில் வார்த்தது போல் அணிவகுத்து நிறுத்துவதிலே வந்து முடிந் திருக்கிறது. அந்தச் சர்வாதிகாரமும் பொதுவுடை மைக் கட்சியினுடையதாக இல்லாமல் 'ஜி. பி. யு.' என்று சொல்லப்படும் ஈவிரக்கமற்ற இரகசியப் போலீசின் மூலம் ஆட்சிபுரியும் ஒரே தலைவ னுடைய சர்வாதிகாரமாக இப்பொழுது அமைந்தி ருக்கிறது. அந்த இரகசியப் போலீசைப் பார்த்தே

இட்லர், தன்னுடைய 'கெஸ்டபோ' போலீசையும் அமைத்துக் கொண்டான். எனவே, பொது உடைமை ஆட்சியின் இயற்கையான முடிவு ஏகாதிபத்தியக் கொள்கை.

மக்களாட்சி : இதை ஜனநாயகம் என்று பொதுவாக அழைக்கிறோம். மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களால், மக்களின் நன்மையின் பொருட்டு ஆளப்படும் ஆட்சியே ஜனநாயகம். இம்முறை இன்றைய உலகிற்கு ஏற்றதாக இருந்தாலும், இதிலும் பல குறைகள் உள்ளன. கட்சிப் பூசல் இவ்வாட்சியிலுள்ள பெரும் குறை. மேலும் சேவையுணர்ச்சியும், உண்மையுணர்வும் அற்ற பலர் தங்களுடைய செல்வாக்கையும் பணத்தையும் பயன்படுத்தி ஆட்சியைக் கைப்பற்றிக் கொள்வது உண்டு. இதனால் தகுதியற்ற பலரும் அரசியலில் இடம் பெற வாய்ப்பு ஏற்பட்டு விடுகிறது. எனவே ஜன நாயகத்தின் தூய்மை கெட்டு விடுகிறது. பொது நலம் புறக்கணிக்கப்பட்டுத் தன்னலம் இடம் பெறுகிறது.

மேற் கூறிய பல்வகை ஆட்சி முறைகளையும் கூர்ந்து ஆராயும்போது, எல்லாம் பழுதுற்றவையே என்பது தெளிவாம். ஒவ்வோர் ஆட்சியும் மக்களின் நலனையே முதற்குறிக்கோளாகக் கொண்டு துவங்கியது; ஆனால் இறுதியில் மக்கள் நலனைக் காற்றில் பறக்கவிட்டது. ஆனால் காந்தியம் இவைகளினின்றும் முற்றிலும் மாறுபட்டது.

வள்ளுவர் வகுத்துள்ள குறிக்கோள்களே காந்தியத்தின் குறிக்கோள்கள். ஆனால் அக்குறிக்

கோள்களை அருளறத்தின் அடிப்படையில் அடைய வேண்டுமென்பது காந்தியடிகளின் கொள்கை. 'முதலாளிகள் என்பவர்கள் ஒரு நாட்டிலுள்ள செல்வத்தின் பாதுகாவலர்கள்; உரிமையாளர்கள் அல்லர்' என்பது காந்தியப் பொருளாதாரம். அதன் படி செல்வர்கள் தம் செல்வத்தை ஏழை மக்கட்கு மனமுவந்து பிரித்துக் கொடுக்கவேண்டும். நிலக் கொடை இயக்கம் காந்தியத்தின் முதல் வெற்றி.

'சட்டங்களைக் காட்டி மருட்டி மக்களை நேர்மையில் செலுத்துவது கூடாது. மக்களே பண்பட்டவர்களாக மாறி அறவழியில் நடக்கவேண்டும்' என்பது காந்தியடிகளின் அரசியல். விநோபாபாவே 'சம்பால்' பள்ளத்தாக்கில் கொள்ளையர்களைத் திருத்துவதற்காக ஒரு சுற்றுப் பயணத்தை மேற் கொண்டாரென்றும், அக்கொள்ளையர் தம் கொலைத் தொழிலை விட்டு அவரைப் பணிந்தனரென்றும் செய்தித்தாளில் படித்தோமல்லவா? இது காந்தியத்தின் இரண்டாவது வெற்றி.

உலக நாடுகளெல்லாம் போர்க் கருவிகளைக் கடலில் எறிந்து விட்டு அருளறத்தைக் கைக்கொள்ள வேண்டும். பிறநாட்டினரைத் தம் உடன் பிறந்தவராகக் கொள்ளவேண்டும். வல்லரசுகள் ஆதிக்க வெறியைக் கைவிட வேண்டும். 'யாதும் ஊரே; யாவரும் கேளிர்' என்ற தமிழர் பண்பாடு, உலகின் உயிர்த்துடிப்பாக மலர வேண்டும். இது காந்தியடிகளின் 'சர்வதேச அரசியல்.'

⁂

# 10. இறுவாய்

உலகில் பல பெரியோர்கள் தோன்றி, அறியாமை இருளில் தவித்துக் கொண்டிருந்த மக்களினத்தை நன்னெறியில் செலுத்தினர்கள். போர் வெறியும், பேராட்சி வெறி (Imperialism)யும் மலிந்திருக்கும் இந்நூற்றுண்டில், மக்களினத்தை நேர் வழிச் செலுத்தக் காந்தியடிகள் தோன்றினர். இந்திய மக்கள் காந்தியடிகளின் பெருமையை உணர்ந்ததை விட, மேலை நாட்டு மக்கள் சிறப்பாக உணர்ந்திருக்கிருர்கள். பிரெஞ்சுப் பேரறிவாளர் ரோமன் ரோலந்து, காந்தியடிகளின் வரலாற்றை எழுதியிருக்கிருர். அதில் அண்ணலைச் 'சமாதானத் தூதுவன்' (Apostle of Peace) என்று பாராட்டிப் பேசுகிருர். லூயி பிஷர் என்ற மேலை நாட்டறிஞர் அண்ணலின் கொள்கைகளை விளக்கி, ஆங்கிலத்தில் அரிய நூலொன்று எழுதியிருக்கிருர்.

இருபதாம் நூற்றுண்டை அணுயுகம்(Atom Age) என்ருே, ராக்கெட் யுகம் (Rocket Age) என்ருே கூறலாம். ஒவ்வொரு வல்லரசும் தன் வலிமையையும் பெருமையையும் உலகில் நிலை நாட்டுவதற்காகப் புதுப்புது விஞ்ஞானக் கருவிகளைக் கண்டுபிடித்தவண்ண மிருக்கின்றது. அவர்கள் கண்டுபிடித்த அவ்வழிவுக் கருவிகளைக் கொண்டு ஒரே நாளில் உலகைச் சுடுகாடாக்கிவிடலாம். எந்த

நேரத்தில் மூன்றாம் உலகப் போர் மூளுமோ? என்று உலக மக்களெல்லாம் குலைநடுக்கம் கொண்டிருக்கின்றனர். ஆனால் வல்லரசுகளோ, படைகளையும் படைக் கருவிகளையும் பெருக்குவதன் மூலம் தான் உலகில் போரை ஒழிக்கமுடியும் என்று கூறி வருகின்றன. இப்போக்கு நீடிக்குமானால் மனித இனம் உலகில் பூண்டற்றுப்போகும் என்பது ஒருதலை.

மக்கள் உள்ளத்தில் படிந்திருக்கும் இவ்வறியாமை இருள் நீங்குவதற்கு ஏற்ற அருமருந்தாகக் காந்தியம் விளங்குகிறது. அழிவுப் பாதையில் விரைந்து செல்லும் இவ்வுலகைத் தடுத்து நிறுத்தக் காந்தியத்தால் தான் முடியும். அவர் உலகிற்கு நல்கியுள்ள வாய்மை, அருளறம் என்ற இரு கொள்கைகளையும், உலக மக்கள் மதித்து ஏற்றுக் கொள்ளவேண்டும். இக்கொள்கைகளின் சிறப்பை மேலை நாட்டு அரசியல் வாதிகள் உணரவில்லை என்று சொல்ல முடியாது. அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள்; ஆனால் சொல்லளவில் நின்றுவிடுகிறார்கள்; 'அருளறத்தையும் சமாதானத்தையும் உலகில் நிலை நாட்டப் போகிறோம்' என்று மேடையில் முழக்கமிடுகிறார்கள்; மாநாடுகள் கூட்டித் தீர்மானம் நிறைவேற்றுகிறார்கள்; ஆனால் வாய்ப்பு நேரும் போது அழிவுப்பாதையில் அஞ்சாமல் ஓடுகிறார்கள். இந்நிலை மாற வேண்டும். அதுவரை இவ்வுலகிற்கு மீட்சி இல்லை.

## கட்டுரைப் பயிற்சி

1. அடிகளின் தமிழ்ப்பற்றும், குறள் பற்றும்.
2. திருக்குறளும் அடிகளின் வாய்மையும்.
3. அடிகளின் வாய்மையும் அதன் சிறப்பும்.
4. வள்ளுவர் சமயம்.
5. அடிகளின் சமயம்.
6. வள்ளுவர் சமயத்திற்கும், அடிகளின் சமயத்திற்கும் உள்ள ஒற்றுமை.
7. வள்ளுவர் வழியில் அடிகளின் சாதிக் கொள்கை.
8. அடிகள் தம் வாழ்வில் கண்ட தீண்டாமைக் கொள்கை.
9. அடிகள் வாழ்வில் அருளறம்.
10. வள்ளுவர் வழியில் அடிகளின் அருளறம்.
11. புலால் மறுப்பும் காந்தியடிகளும்.
12. காந்தியடிகளும் காலந்தவறுமையும்.
13. அடிகளாரும் இல்லறமும்.
14. உலகில் இன்றுள்ள அரசியல் முறைகளும் அவற்றின் தன்மைகளும்.
15. வள்ளுவரும் அடிகளும் அரசியலில் கொண்ட கருத்தொற்றுமை.
16. வள்ளுவர் வழியில் காந்தியம்.

[இவை ஒவ்வொன்றைப் பற்றியும் இரண்டு பக்கங்கட்கு மிகாமல் ஒவ்வொரு கட்டுரை வரைக.]

# VALLUVAR VAZHIYIL GANDHIYAM

( For Standards VIII & IX )

By

Pulavar M. Shanmugasundaram, M. A.,



Grams : "BOOKS" Phone : 399

SIVALINGAM PUBLISHING HOUSE

EDUCATIONAL PUBLISHERS

P. B. No. 96 :: ERODE.

1962

 [Price Re. 1-20 nP.